# அருளோசை

திருவள்ளுவர்
ஆண்டு 2004
தை
1973 ஜனவரி



திருமயிலை மாதவப்பெருமாள்

கணேசன்

தமிழ்நாடு தெய்விகப் பேரவை
சென்னை-14

## வழிகாட்டுகிறார்கள்

"அருளோசை" சந்தாதாரர் திரு. மயிலைவாணன் அவர்கள், தமது பிறந்தநாளை முன்னிட்டு, சென்னை அன்பர் திரு. எஸ். முத்துக்குமாரன், பி.இ., எம்.எஸ்.சி., அவர்கள் கருத்துத் தெரிவித்தபடி, (1) வைத்தியர் திரு. ஜி. இரவீந்திரன், மதுரை (2) திரு. க. அண்ணாமலைப் பிள்ளை, மாயூரம் (3) திரு. எம். அய்யாவு, வாகைக் குளம் பிரிவு, மணப்பாறை ஆகிய மூன்று அன்பர்களுக்கு ஓராண்டுச் சந்தா செலுத்தியுள்ளார்கள். நீங்களும் பின்பற்றலாமே!

## என் கடன் பணி செய்து கிடப்பதே!

சென்னை மாவட்ட இந்து இளைஞர் மன்றத்தின் உறுப்பினர்கள் (1) திரு. சு. பாபு (2) திரு. சு. நீலகண்டன் (3) திரு. ஆர். சுரேஷ் குமார் (4) திரு. கண்ணன் (5) திரு. மு. வெங்கடேசன் (6) திரு. சுந்தரேசன் (7) திரு. எம். தியாகேஷ் ஆகிய எழுவரும், 7-1-73 ஞாயிறன்று அதிகாலை மாநிலத்தலைவர் திரு. சுகி. சிவம், அவர்கள் தலைமையில் தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் சார்பில் திருப்பணி செய்யப் பெற்று வரும் வடதிருமுல்லைவாயில் திரு. மாசிலாமணீசுவரர் திருக்கோயிலுக்குச் சென்று, கோயில் செயல் அலுவலர் திரு. ம. செல்வராஜ் அவர்களின் ஒத்துழைப்புடன் கல்லும் முள்ளும் மண்டிக் கிடந்த பிரகாரம் முழுவதும் உழவாரத் தொண்டு செய்து, கோயிலையும் தூய்மை செய்து, திருப்பணி வேலைகளின் போது விழுந்த செங்கல் மணல் முதலியவற்றை அப்புறப்படுத்தி, அங்குமிங்குமாக வைக்கப்பட்டிருந்த வாகனங்களை ஓரிடத்தில் வைத்து, ஆலயத்தை தூய்மை பெறச் செய்து விட்டனர். எழுச்சிமிக்க இளைஞர் சமுதாயம், அருள் நெறியைப் பரப்பக் கிளர்ந்தெழுந்து விட்டது என்பதற்கு இதுவே ஒரு நல்ல சான்றாகும். பேரவையுடன் இணைந்துள்ள ஏனைய மன்றங்களும் இதனைப் பின்பற்றிச் செய்த பணிகளைச் சுருக்கமாக எழுதியனுப்பினால், அருளோசையில் வெளியிடுகிறோம் ஆசிரியர்.




(திங்களிதழ்)

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.



| | | |
|---|---|---|
| மணி 1 | பரிதாபி தை<br>1973 ஜனவரி | ஓசை 7 |



அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்!

பொங்கல் திருநாளை மகிழ்வுடன் கொண்டாடிக் கொண்டிருக்கும் இனிய நேரத்தில் "அருளோசை" இதழின் சார்பிலும் பேரவையின் சார்பிலும் எமது உளங்கனிந்த பொங்கல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

வினாவிடைப் பகுதிக்கு நாங்கள் எதிர்பார்த்த அளவில் விடைகள் வரவில்லை. அளவில் மிகக் குறைந்திருந்தாலும் அவை மிக உயர்ந்த தரமான விடைகளாக இருக்கின்றன. 2500 பேருக்கு மேல் (சந்தா) உறுப்பினர்கள் இருந்தும் 100க்கும் குறைவானே விடைகளே வந்துள்ளன. வினாவிடைப் பகுதியில் பெரும்பாலானவர்களைப் பங்கு கொள்ளச் செய்து வினாக்களுக்கு விடை எழுத வேண்டும் என்பதற்காக வாவது அன்பர்கள் அவற்றை ஆழ்ந்து படிக்கட்டும் என்ற பெரு நோக்கத்துடனே "அருளோசை" வெளியிடப் பெறுகிறது. குறைந்த அளவு 1000 உறுப்பினர்களாவது தங்கள் விடைகளை எழுதி அனுப்பினால் நாங்கள் மன நிறைவு கொள்வோம். எனவே தங்கள் பொன்னான நேரத்தில் அருளோசை வினாவிடைப் பகுதிக்கெனச் சிறிது நேரம் ஒதுக்கி எழுதியனுப்ப வேண்டுகிறோம்.

திங்கள் தோறும் பரிசு பெறுதவர்கள் கூடத் தொடர்ந்து எழுதுவதால் ஆண்டிறுதியில் பரிசு பெற வாய்ப்புண்டு. பரிசை ஒரு பொருட்டாகக் கருதி தங்கள் வினாவிடை எழுதுவதில் தயக்கம் காட்டவேண்டாம்.

மேலும் பலர் அருளோசை இதழ் தாமதமாக வருகிறது என்று எழுதி யிருக்கிறார்கள். தாங்கள் எங்களுக்கு எழுதியுள்ள முகவரியை அப்படியே எழுதி ஒவ்வொரு இதழையும் சரிபார்த்து ஆங்கிலமாதம் 15-ஆம் தேதி யன்று அஞ்சலில் தவறாமல் சேர்க்கிறோம். தங்களுக்கு 20-ஆம் தேதிக் குள் இதழ் கிடைக்கவில்லையானால் ஒரு அஞ்சலட்டையில் தெரிவியுங்கள்

15-ஆம் தேதிக்குப் பிறகு நாங்கள் அருளோசையை அஞ்சலில் சேர்ப்ப தனுல் 25 காசு அஞ்சல் தலை ஒட்டவேண்டும். சென்ற திங்களில் ஓர் அன்பர் 18-ஆம் தேதி வரை இதழ் கிடைக்கவில்லை என்று எழுதியிருந் தார். நாங்களும் அனுப்பிவைத்தோம். அதற்குள் நாங்கள் முதல் அனுப் பிய இதழே கிடைத்திருக்கிறது. அதனுல் 25 காசு தலை ஒட்டி அனுப்பிய இதழைத் திருப்பியனுப்பிவிட்டார். தற்போது அருளோசை அடக்க விலைக்கும் குறைவாகவே தங்களுக்குத் தரப்படுகிறது. இந்நிலையில் இதுபோன்ற எதிர்பாராத செலவுகள் ஏற்படாவண்ணம் தாங்கள் உதவி புரிய வேண்டுகிறேம். தங்கள் முகவரி சரியாக இல்லாவிடின் தயவு செய்து ஒரு அஞ்சலட்டையில் தங்கள் தெளிவான முகவரியைத் தெரிவிக்கவேண்டுகிறேம்.

சிரமம் பார்க்காமல் எல்லா அன்பர்களும் தங்கள் தெளிவான முகவரி யுடன், தற்போது தங்கள் பகுதிக்கு அஞ்சல் துறையினரின் "பின்கோடு" எண் என்ன என்பதையும் தெரிவித்தால் மிகவும் துணையாக இருக்கும்.

அ. நாராயணசுவாமி,
பதிப்பாசிரியர்.

---

## இந்த இதழில்



"திருவளர்செல்வனுக்கு" என்ற தொடர் கட்டுரை அடுத்த இதழி லிருந்து தொடர்ந்து வெளிவரும். —ஆசிரியர்.

---

# "அருளோசை"

## வினு விடைப் பகுதி—டிசம்பர்-72
### பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு: சி. ஞானம், உசிலம்பட்டி. சந்தா எண் 1312.

இரண்டாம் பரிசு: திரு. சோ. கிருஷ்ணமூர்த்தி, திருச்சி-2. சந்தா எண் 1025.

மூன்ரும் பரிசு: திரு. தி. கு. நவனீதம், திருச்சி-2. சந்தா எண் 93

நான்காம் பரிசு: திரு. கி. கஸ்தூரிரங்கன், திருவெண்காடு சந்தா எண் 1430.




## உயிர்வாழ்வான் யார் ?

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருக்குறள் ஒரு சமுதாய ஒழுக்க அமைப்பு நூல். மனிதர்கள் தம்முள் கூடிவாழக் கடமைப்பட்டவர்கள். அதுவே, மனித நாகரிகத்தின் விழுமிய சிறப்பு. 'மனிதன் ஒரு சமூகப் பிராணி' என்றார் ஓர் ஆங்கிலப் பெரும்புலவர். விலங்குகளில் கூட்டு வாழ்க்கை இல்லை. ஒரோவழிச் சில விலங்கினங்களிடத்தே கூட்டு வாழ்க்கைமுறை இருந்தாலும்கூட அஃது அச்சத்தின்பாற்பட்டதே யொழிய, அன்பின்பாற்பட்டதன்று. சமுதாயக் கூட்டு வாழ்க்கையை வளர்ப்பதென்பது மிக நுண்ணிய ஆற்றல். தம் இச்சைவழிச் செல்லும் பொறிகளின்மீது தனியரசு செலுத்துவோரே கூட்டுப் பொது வாழ்க்கையைத் திறமையாக நடத்த முடியும். சமுதாயக் கூட்டு வாழ்க்கைக்கு உரிய சிறந்த பண்புகளில் ஒன்று ஒப்புரவு அறிதல்.

ஒப்புரவறிதல் அதிகாரத்தில் வரும் குறட்பாக்களுக்கு உரையாசிரியர்கள் பெரும்பாலும் 'இல்லாதவர்களுக்குக் கொடுத்தல்—உதவி செய்தல்' என்ற தன்மையிலேயே பொருள் கண்டுள்ளனர். இல்லாதவர்களுக்குக் கொடுக்கும் பண்பை—இயல்பை, ஈகை என்ற தனி அதிகாரத்தில் திருவள்ளுவர் கூறுகின்றார். ஈகை, ஒப்புரவறிதல் இவ்விரண்டும் ஒன்றுபோலத் தோற்றமளித்தாலும் ஆழமான கருத்து வேறுபாடு உடையன. ஈகை வழிப்பட்ட சமுதாயத்தில், உடையார்—இல்லார் என்ற வேற்றுமை விரிந்திருக்கும். அவ்வழிப் புகழ்ச்சியும் இகழ்ச்சியும் தலைதூக்கி நிற்கும். ஒப்புரவறிதலில் உடையார் இல்லார் வேற்றுமையின்றி, உயர்வு

தாழ்வு இன்றிக் கொடுத்தல் கடமை எனவும், கொள்ளல் உரிமை எனவும் கருதும் அடிப்படையிலேயே அந்த அதிகாரம் அமைந்துள்ளது.

ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்

என்பது திருக்குறள். இங்கு 'ஒத்தது' என் சொல்லுக்கு வழக்கம்போல் பரிமேலழகர் 'உலக நடையினை' என்று எழுதித் தப்பித்துக் கொண்டு விட்டார். அது நிறைவான கருத்தன்று. 'தன்னைப் போல் பிறரை நினை' என்பது ஒரு விழுமிய ஒழுக்கநெறி வாக்கு. இன்றையச் சமுதாயத்தில் பலர் தம்மோடு பிறர் ஒத்துவர வேண்டும் என்று விரும்பு கிறார்களே தவிர, பிறரோடு தாம் ஒத்துப்போக வேண்டும் என்று கருதவில்லை. பலருக்கு எது ஒத்ததோ அதற்குச் சிலர் இணங்கியே வாழ வேண்டும். அதுவே சமுதாய நியதி—ஒழுக்கம். அங்ஙனம் உணர்ந்து வாழ்பவர்களே வாழ்பவர்கள். அவர்கள் வாழ்க்கையிலேயே இன்பமும் அமைதியும் இருக்கும். மற்றோர்க்கும் அவர்தம் வாழ்க்கையாற் பயனுண்டு. இங்ஙனம், ஒத்ததறிந்து ஒழுகத் தெரியாதவர்கள் வாழ்ந்தாலும் நடமாடினாலும் பிணம் என்றே கருத வேண்டும் என்று திருக்குறள் கூறுகிறது. காரணம், பிணத்திற்கு மனித உருவ அமைப்பு இருந்தாலும் உணர்ச்சியில்லை. உதவும் பணியில்லை. அதுபோலவே, ஒத்ததறிந்து வாழும் இயல் பில்லாதவர்களுக்கும் அன்பு, சமுதாயம் ஆகிய உணர்ச்சிகள் இல்லை. அவர்களும் உதவ மாட்டார்கள். பிணத்தை நடு வீட்டில் நடுத்தெருவில் பல நாட்கள் வைப்பதரிது. காரணம் நாற்றமெடுக்கும்; காற்றைக் கெடுக்கும்; சமுதாயத்திற்கு நோய் தரும். அதுபோலவே, ஒத்ததறிந்து உதவி வாழ முடியாத மனிதன் நெஞ்சத்தால் நாற்றமெடுத்தவனாவான். பிணம்போல் நாறுவான். அந்நாற்றத்தைத் தன்னுடைய சொற்களாலும் செயல்களாலும் வெளிப்படுத்துவான். தொல்லைசெய்வான். பிணத்தை வீட்டிலிருந்து விரைவாக எடுத்துச் செல்வதுபோல, சமுதாயத்திலிருந்து இந்த மனிதர்களையும் விரைவில் எடுத்தாக வேண்டும்.

ஒத்தது அறிவான் என்று சொன்னமையால் தானே வலிய முயன்று அறிந்து செய்தலையே திருவள்ளுவர் இங்கு குறிப்பிடுகிறார். இதையே (Volunteer Service) என்று குறிப்பிடுகிறார்கள். குறட்பாவைப் பாருங்கள்.

ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். (திருக்குறள்—214)

# தன்னையறிந்தின்பமுற

தன்னையறிந் தின்பமுற-வெண்ணிலாவே
ஒரு தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே !

(திருஅருட்பா)

தன்னை அறிதல் என்றால் என்ன? தன்னை அறிந்து கொள்வது எப்படி? தன்னை அறிந்து கொள்வதால் பயன் உண்டா? என்ற கேள்வியை நமக்கு நாமே கேட்போமானால், கேட்டும் புலன் வழி போகாது திரிகரணங்களையும் அடக்கி நின்றோமானால் ஆங்கு-'தன்னையறிந்தின்பமுறுவது' தானே சித்திக்கும். "நான் யார்? என் ஞானங்கள் யார்?" எனக் கேட்போமானால் 'தன்னை அறிந்து இன்பமுறலாம்', தன்னை அறிவது என்பது நம் மனத்துக்குள்ளேயே யிருக்கும் சோதியை (பரம்பொருளை) உணர்வது ஆகும். தன்னை அறிந்தால் பிறவியை ஒழித்துப் பேரின்பமுறலாம்.

தன்னையும் இன்னார், இனியன் என்று எண்ணாமலும் சிந்திக்காமலும் இருந்தும், அஞ்ஞானக் கோரை மண்டித் தரிசாக கிடந்தாலும், புலன் வழி ஏகி, மனம் போன போக்கில் சென்றால் ஆங்குச் 'சிற்றின்பங்களும்' "பெருந்துன்பங்களுமே" விளையும். ஒரு முடிவுடைய இன்பங்களும், முடிவிலாத் துன்பங்களும் தான் மிஞ்சும்.

இச்சிற்றின்பங்களும் அளவீடற்ற இடுக்கண்களும் அடுக்கடுக்காக வந்து புதைசேற்றில் ஆழ்த்தும்.

இன்னும் ஒவ்வொரு பொழுதும் மலமொடு எழுந்திருந்து பசி, நித்திரை, யாத்திரை, பிழைத்து, பித்த உலகத்தில் பித்தனாக ஆகி, மதம் கொண்ட யானையைப் போன்று 'ஆசை' என்ற வலையில் வீழ்ந்தும், கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும், பொறாமை என்ற பேயால் ஆட்டுவிக்கப்பட்டும், செல்வம், வறுமை, அறிவு இவைகளில் தேனில் விழுந்த ஈயாக மயங்கி, வாது பேசி, ஆறுகோடி மாயா சக்திகள் ஊடே பிழைத்தும், 'நாத்திகம்' பேசி நாத்தழும்பு

ஏறியும், உறவு சுற்றம், நட்பு, என்னும் அவலக்கடலில் வீழ்ந்தும், சமயம், மதம், சாத்திரம், கோத்திரம். விரதம் இவைகளில் மயங்கியும், ஐம்பூதங்களின் அல்லலில் சிக்கியும், இன்னும் பல அளவீடற்ற மாயையின் சூழ்ச்சிகளுக்கு ஆளாகி வீணே விழலுக்கு இறைத்த நீர் போல பிறந்து, பிறந்து, இறந்து, இறந்து, பவக்கடல் ஏருது, பிறவிக்கரை காணுது நீந்திக் கொண்டேயிருக்க வேண்டியது தான் 'தன்னையறிந்து இன்பமுருத வரையில்.

தன்னை அறிந்து இன்பமுறுவதாவது "பேரின்பம்" எனப்படும். இப்பேரின்பத்திற்கு 'முதலும் முடிவும்' இல்லை. பேரின்பத்தை அனுபவிக்குங் காலத்து சலிப்பில்லை, வெறுப்பில்லை, கசப்பில்லை. தன்னை அறிய ஆங்கு ஆணவம், கன்மம், மாயை ஆகிய மலங்கள் தன்னை அறிந்த மாத்திரத்திலேயே நிர்மலமாகி விடும். எல்லாமும் தானேயாகி பேரின்பத்தோடே தன்மயமாதல்.

இப்புன்புலால் யாக்கை புரையோடிக் கனியுமாறு, கண்ணுர நீர் மல்கி, கசிந்துருகி. உள்ளம் நெக்குருகி, நாயினேன், பேயினேன், வன் மனத்தேன் என அரற்றி 'தான்' என்ற அகந்தைக் கிழங்கை அகழ்ந் தெடுத்து நினைந்து, நினைந்து, உணர்ந்து, உணர்ந்து, நெகிழ்ந்து, நெகிழ்ந்து, சிந்தித்து, சிந்திக்கும் பொருளும், சிந்திக்கும் திறனும் ஒரே தன்மையதாகி முயற்சி செய்து, நொந்து, நொந்து, அழுது, புலம்பி, அரற்றி, எவ்விதத்தாலும் சலனம் அடையாது, நிலைகுலையாது, தாயையே நினைந்து அழும் சேய் போல ஒரே குறிக்கோளாக நம் மனதை உள்முகமாக நிறுத்தி ஒருமைப் படுத்தித் தூய்மை செய்தோமானுல் ஆங்குத் தோன்றும் உள்ளொளியை (சோதியை)க் கண்டு, அதாவது 'தன்னை அறிந்து இன்ப முறலாம்.'

இப்பேரின்பத்திற்கு ஒரு வரையறையில்லை. இதனுல் தான் தன்னை அறிந்து இன்பமுற்றவர்கள் "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்றனர்.

> "ஒருநாமம், ஓர் உருவம், ஒன்றும் இல்லாற்கு ஆயிரம்
> திருநாமம் பாடி, நாம்-தெள்ளேணம் கொட்டாமோ"
> (திருவாசகம்)

என்ற மணிவாசகரின் மணிவாக்காலும் இதை உய்த்துணரலாம்.

'உன்னையே நீ அறிவாய்'—என்ருர் கிரேக்க நாட்டுப் பேரறிஞரான சாக்ரட்டீஸ். ஆகவே நம்மையே நாம் நன்கு அறிந்தோமானுல் நடப்பது யாவும் நலமே. பலன் என்னவாக இருக்கும் எனச் சிந்திக்க வேண்டா.

நம்மை நாம் அறிந்து கொள்ளாத போதுதான் பலனைப் பற்றி ஏங்கி, எவ்வாறு வழி தவறிய ஒருவன் திகைப்பானே அவ்வாறு இவ் உலகாயதத்தில் தவிக்க வேண்டி உள்ளது. இவ்விதம் தவிப்பதால்

தடுமாற்றமும், தடுமாற்றத்தில் மனம் அமைதியிழந்து தன்னை அறியாமல் விழலுக்கு நீர் இறைத்து எட்டிக்காயாகத் தனக்கும் பயனின்றி, பிறருக்கும் பயனின்றிக் கெடுகின்றன என்பதை திருமூலர் வாக்கால் அறியலாம்.

"தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்".

(திருமந்திரம்)

தன்னை அறிந்தால் பிரிதொன்றால் ஆங்கு யாதொரு தீமையும் இல்லை. இதனால் தான் கணியன் பூங்குன்றனார் என்ற பெரும் புலவர் "தீதும் நன்றும் பிறர் தர வாரா"—(புறம்) என்றார்.

தன்னை அறிவதே ஞானத்தின் இறுதி நிலையாகும். தன்னை அறிந்தால் ஆங்கு தன்னுள்ளே ஈசனைக் காணலாம்.

"தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந்தானே"

(திருமந்திரம்)

என்ற திருமூலர் வாக்காலும்

"தேடிக் கண்டு கொண்டேன்...தேவனை
என்னுள்ளே தேடிக் கண்டு கொண்டேன்"

(தேவாரம்)

என்ற அப்பரடிகள் வாக்காலும் அறியக் காண்கிறோம். இக்கருத்தையே உணர்ந்த தாயுமானவர்

"நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்—அன்பே
மஞ்சன நீர் பூசை கொள்ளவாராய் பராபரமே"

என்று தானும் பரமும் ஒன்றாகிய நிலையை எடுத்தியம்புகின்றனர்.

தன்னை அறிந்து இன்பமுற்றவர்கள் கூற்றுவனுக்கு அஞ்ச வேண்டியதில்லை என்பதை திருமந்திரத்தால் அறியலாம்.

"ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவதில்லை நமனுமங்கில்லை".

திருநாவுக்கரசர் கூறுவதுபோல் தன்னை அறிந்தால் ஆங்குத் தன் மனத்துள்ளே மறைந்துள்ள ஈசனைக் காணலாம்.

"விறகில் தீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டுணர்வுக் கயிற்றினால்
முறுக வாங்கிக்கடைய முன் நிற்குமே."

(தேவாரம்)

மனம், வாக்கு, காயத்தால் வல்வினைகள் ஆரம்பமாகும். வல்வினை ஆரம்பமாகிய போது பிறவி உண்டாகும். பிறவி தொடரும் போது பாவ, புண்ணியங்கள் வந்து சேரும். இதையே பிறவி வாசனை என்பார்கள். மனம், வாக்கு, காயம், நேர் நிற்கில் பிறவியில்லாப் பெரு நிலையை அடைவர்.

“ அனைத்துலகும் ஆய நின்னை
ஐம்புலன்கள் காண்கிலா”—என்பதாலும்

“ இரந்து இரந்து, உருக என் மனத்துள்ளே
எழுகின்ற சோதியே”—என்ற திருவாசகத்தாலும் “ தன்னை யறிந்தின்பமுற்றார்” நிலையை உணரலாம்.

தன்னை அறிந்து இன்பமுற்றோர்களுக்கு இருவேறுபட்ட தன்மைகளே ஆங்கு இல்லை. இப்புன்புலால் யாக்கையில் உயிர் புணர்ந்து கொண்டிருக்கும் போதே எது எதுவோ அது அதுவேயாகி ‘அருட்சோதியில்’ கலத்தலே தன்னையறிந்தின்பமுறுதல் ஆகும்.

“ தன்னையறிந்திருந்த தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பார்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்
சென்னியில் வைத்த சிவனருளாலே.” (திருமந்திரம்)

அவனருளாலே அவன் ‘தாள்’ வணங்கி கிடைத்தற்கரிய இம்மானுட உடலைப் பேரின்பத்திற்காகவே பயன்படுத்தி “தன்னையறிந்தின்பமுற்று” பேரின்ப வாழ்வினை (நிறைவுடைய வாழ்வினை)ப் பெற்றுப் பேரின்பத்தை அடைவோமாக.

—‘தென்றல்’

---




## திருவேட்டீசுவரர் கோயில்

திரு. கே. எஸ். நரசிம்மன், பி.ஏ., பி.எல்., ஐ.ஏ.எஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

முன்னுரை :

சென்னை மாநகரில் பற்பல சிறந்த கோயில்கள் உள்ளன. அவை களுள் திருவல்லிக்கேணிப் பகுதியில் உள்ள திருவேட்டீசுவரர் கோயிலும் ஒன்றாகும். இது பார்த்தசாரதிப் பெருமாள் கோயிலுக்கு வடமேற்கி லுள்ள ஓர் அழகான கோயிலாகும்.

வேட்டீசுவரன் :

இக்கோயிலிலுள்ள சிவபெருமானுக்கு வேட்டீசுவரன் (வேட்டுவ + ஈசுவரன்) என்பது பெயர். அதாவது வேட்டுவன் வடிவம் கொண்டு வந்த ஈசுவரன் என்பது பொருள். அருச்சுனன் பாரதப் போரில் வெற்றி பெறுவதற்காகப் பாசுபதாஸ்திரம் பெற விரும்பிக் கடும் தவம் புரிந்த போது, அவனைக் கொல்வதற்காகத் துரியோதனனின் ஏவலால் பன்றியின் உருவம் கொண்டு தாக்குவதற்கு வந்த மூகாசுரன் என்பவனை வதைத்து, அர்ச்சுனனைக் காப்பாற்றுவதற்காக வேட்டுவ வடிவங் கொண்டு சிவபெருமான் எழுந்தருளினன். அந்நிலையிலேயே சிவபெரு மானுக்கு 'வேட்டீசுவரன்' என்னும் ஒரு பெயர் ஏற்பட்டது.

" வேடனாய் விசயன்றன் வியப்பைக் காண்பான்
 விற்பிடித்துக் கொம்புடைய ஏனத்தின் பின்
கூடினார் உமையவளும் கோலம் கொள்ளக்
 கொலைப்பகழி உடன்கோத்துக் கோரப் பூசல்
ஆடினார்............"

" நெடியமால் பிரம னோடு நீரெனும் பிலயங் கொள்ள
அடியொடு முடியுங்காணா அருச்சுனற்கு அம்பும் வில்லும்
துடியுடை வேடராகித் தூயமந் திரங்கள் சொல்லிக்
கொடிநெடுந் தேர்கொ டுத்தார் குறுக்கைவீ ரட்ட னாரே.

வைப்புத்தலம் :

திருவேட்டீசுவரன் ஆகிய சிவபெருமான், கோயில் கொண்டு எழுந்தருளிய காரணம் பற்றி திருவல்லிக்கேணியின் ஒரு பகுதிக்குத் திருவேட்டீசுவரன் பேட்டை என்னும் பெயர் ஏற்பட்டது. இந்தத் தலம் மிகவும் பழமையான பாடல்பெற்ற தலம். இதனைத் தேவாரத்தில் " தீக்காலிவல்லம் திருவேட்டியும் " என்று திருநாவுக்கரசர் திருத்தாண்டகத்தில் பாடியிருக்கிறார். இதனால், இஃது ஒரு வைப்புத்தலம் என்று நாம் அறிகின்றோம். சைவநாயன்மார்களால் தம்முடைய ஒரு பதிகத்தின்கண், ஒரு பாடலில், எங்கேனும் ஓரிடத்தில் வைத்துப் புகழ்ந்து போற்றப்பெற்ற தலம், வைப்புத்தலம் எனப்படும். திருநாவுக்கரசரின் திருத்தாண்டகத்தில் வைத்துப் புகழ்ந்து போற்றப் பெற்றுள்ளதனால், இத்தலத்தின் பழமையும் பெருமையும் இனிது விளங்கும்.

பார்த்தப்பிரகரலிங்கம் :

இக்கோயிலிலுள்ள இலிங்கம், பார்த்தப் பிரகரலிங்கம் என்று சிறப்பித்துச் சொல்லப் படுவதாகும். வேட்டுவ வடிவத்தில் வந்த சிவபெருமான், தமது அருள்விளையாடலாக, பார்த்தன் என்னும் அர்ச்சுனனை வலிந்து போருக்கு அழைத்தார். வந்திருப்பவர் யார் என்று அறியாத அர்ச்சுனன், வேட்டுவன் என்று கருதித் தனது வில்லால் சிவபெருமானின் தலையில் ஓங்கி அடித்தான். அவ்வடி அவன் மீதும் அகில உலகங்களில் உள்ள அனைத்துயிர்களின் மீதும் பட்டது. அந்த அடியினால் ஏற்பட்ட தழும்பை அடையாளமாகக் கொண்டதே "பார்த்தப் பிரகரலிங்கம்" என்று சிறப்பித்துச் சொல்லப்பெறும். இவ்வமைப்பை உடைய சிவலிங்கத் திருமேனிகள், பெரியோர்களால் மிகவும் சிறப்பித்துப் போற்றிப் புகழ்ந்து கூறப்படும்.

திருவேட்டீசுவரன்பேட்டைக் கோயிலிலுள்ள சிவலிங்கம் ‘பார்த்தப் பிரகர லிங்கம் என்னும் திருப்பெயரைக் கொண்டது. ஆதலின் இது மிகவும் தெய்வீகச் சிறப்பு வாய்ந்தது ஆகும். இக்கோயிலிலுள்ள சிவலிங்கப்பெருமானின் திருமுடியில், இதற்கு அடையாளமாக ஒரு தழும்புப் பிளவு இருத்தலை, யாவரும் காணலாம்.

வழிபட்டோர் :

இக்கோயிலுக்கு உரிய பலதிறப் பெருமைகளுள் ஒன்றை, இங்குச் சிறப்பாகக் குறிப்பிடுதல் தகும். தமிழ்த்தாயின் தவப்புதல்வராகத் தோன்றி, நம் தமிழ் மொழிக்கு ஈடு இணையற்ற இனிய பல பெருந் தொண்டுகளைச் செய்து, தமிழைப் பெரிதும் வளர்த்தருளிய சான்றோர் பெருந்தகையாகிய தமிழ்த்தாத்தா, மகா மகோபாத்தியாய டாக்டர் திரு. உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள், இப்பேட்டையில் வாழ்ந்து வந்ததோடன்றி, இக்கோயிலை நாள்தோறும் காலையிலும் மாலையிலும் முறையாகப் போற்றிப் பல்லாண்டுகள் வழிபட்டு மகிழ்ந்திருக்கின்றார்கள். பண்டைக் காலத்தில், தேவர்களும் முனிவர்களும் சில தலங்களைப்

போற்றி வழிபட்ட செய்திகளைச் சமய நூல்கள் சாற்றுகின்றன. அந்நிலையில் நமது தமிழ்த் தாத்தா அவர்கள், பல ஆண்டுகள் போற்றி வழிபட்டு வந்தமை, நமக்கு இக்கோயிலின் அருமை பெருமைகளை விளக்கப் போதியதாகும்.

கோயிலின் அமைப்பு :

இக்கோயிலில், வல்லப கணபதி சந்நிதி, விசுவநாதர் சந்நிதி, ஆறுமுகப் பெருமான் சந்நிதி முதலியன பிரகாரத்தில் தனியே அமைந்துள்ளன. மற்றும் அறுபத்து மூன்று நாயன்மார்கள், சமய குரவர், சந்தானகுரவர் திருவுருவங்களும் சிறப்புற எழுந்தருளச் செய்யப் பெற்றுள்ளன. அம்பிகைக்கும் நடராசப் பெருமானுக்கும் தனிச் சந்நிதிகள் அமைந்திருக்கின்றன. அம்பிகையின் பெயர் சண்பகாம்பிகை என்பது. இக்கோயில் மிக்க அழகும் அமைதியும் தூய்மையும், புனிதமும் பெற்று விளங்கி வருகின்றது.

முடிவுரை :

சென்னை மாநகரிலுள்ள, பழமையும் பெருமையும் சான்ற, அழகிய சிறந்த இக்கோயிலுக்குச் சென்று தரிசித்து, அன்பர்கள் அனைவரும் இன்புற்று மகிழ்வார்களாக.

# திரு. கிருபாசமுத்திரபெருமாள் கோயில், சிறுபுலியூர்

கொல்லுமாங்குடி (அஞ்சல்), நன்னிலம் வட்டம். தஞ்சை மாவட்டம்.

திருப்பணி & கும்பாபிஷேகம்

## நிதிஉதவி வேண்டுகோள்

" கருமா முகிலுருவா கனலுருவா புனலுருவா
பெருமால் வரையுருவா பிறவுருவா நினதுருவா
திருமா மகள்மருவும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
அருமா கடலமுதே உனதடியே சரணமே."

அன்புடையீர்!

இத்திருக்கோயில் 108 வைணவத் திருப்பதிகளுள் 11-வது பதியாகவும் திருமங்கையாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப் பெற்றதுமாகும். திருவரங்கம் போன்று தெற்குநோக்கிய சன்னதியை கொண்ட கோயில் இது ஒன்றேயாகும். மூலவர் திரு. அருமாகடலமுதன் திருமாமகளுடன் கூடி பாலசயனங்கொண்ட பெருமாளாக, கண்ணுவ முனிவருக்கும், பால முனிவரான புலிக்கால் முனிவருக்கும் இங்கு காட்சியளிக்கின்ருர். உற்சவருக்கு திரு. 'கிருபா சமுத்திரப் பெருமாள்,' 'சரணுகதரட்சகர்' என்ற பெயர்களும் வழங்குகின்றன.

முன்ெரு சமயம், தனக்கும், கருடனுக்கும் ஏற்பட்ட கொடிய பகைமை தீர அனந்தனுன ஆதிசேடன் பலஇடங்களுக்கும் சென்று ஓடி, ஒழிந்து திரிந்து, முடிவில் இத்தலம் சார்ந்து பெருமாளை நோக்கித் தவம் செய்ய திரு. அருமாகடலமுதன் அபயம்தந்து அவனைத் தமக்கு சயனமாகக்கொண்டு இங்கு பாலசயனமாக திவ்ய சேவை சாதிக்கின்ருர். இத்திருக்கோயிலுக்கு மேற்கில் உள்ள திருவனந்தத் தீர்த்தக்கரையில் தவம்செய்யும் திருக்கோலத்துடன் இன்றும் திருவனந்தாழ்வார் தனியாகக் கோயில் கொண்டுள்ளார். சூரியன், அனந்தன், துர்வாசர், மணவாளமாமுனிகள் முதலானேர் வழிபட்டுப் பேறுபெற்றது இத்தலம். கோயிலுக்கு வெளியே ஸ்ரீ மணவாளமாமுனிக்குத் தனியே கோயில் ஒன்று உள்ளது. இங்கு இவருக்கு வருடந்தோறும் 10 நாள் உற்சவம் நடைபெற்று வருகின்றது.

இத்தகைய பெருமை வாய்ந்த இத் திருக்கோயிலின், பெரிய ராஜ கோபுரம், மற்றும் சிறிய ராஜகோபுரங்கள், விமானங்கள் ஆகியவற்றிற்குத் தற்சமயம் பெரிய அளவில் திருப்பணி வேலைகள் நடைபெற்று வருகின்றன. ஷை திருப்பணி வேலைகளுக்கும் விரைவில் நடைபெற விருக்கும் மகாகும்பாபிஷேகம் வகைக்கும் மிகுதியாகப் பணம் தேவைப் படுகிறது. எனவே ஆஸ்திகப் பெருமக்கள் அனைவரும் தங்களால் இயன்ற நன்கொடைகளை வாரி வழங்கி இப்புண்ணிய கைங்கரியத்தில் ஈடுபட்டு திரு. கிருபாசமுத்திரப்பெருமாள் அருள்பெற்றுய்யப் பணிவுடன் வேண்டுகிரேம்.

திரு. கே. எம். குருசாமி பிள்ளை.
திரு. எஸ். வரதராஜப் பிள்ளை.
தர்மகர்த்தர்கள்.

திரு. வி. சுந்தரேச அய்யர்,
தலைவர், திருப்பணிக்குழு.

கே. ஏகாம்பரநாதன், பி. ஏ.,
செயலாளர் & பொருளாளர்.
நிர்வாக அதிகாரி.




## ஆண்டாள்

[வித்துவான் திரு. கா. அ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,]

அன்ன வயற்புதுவை யாண்டா ளரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்—இன்னிசையாற்
பாடிக் கொடுத்தாள் நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

முன்பொருகால் மிதிலைமா நகரத்தில் யாக பூமியை உழுபடைகொண்டு உழுத காலத்தில், அவ்வுழுபடைச்சாலிலே சீதாப் பிராட்டி தோன்றினாப் போலே நம்மாண்டாளும் பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிப்புத்தூரில் பெரியாழ்வார் என்னும் திருமாலடியார் திருத்துழாய்ப் பாத்தியமைக் கையில் அவர் கொத்தின இடத்தில், பூமியில் தோன்றினாள். ஆடி மாதத்துப் பூரநட்சத்திரத்தில் திருநந்தவனத்தில் திருத்துழாய்ச் செடியின் மண்ணில் தோன்றிய அக்குழந்தையைப் பெரியாழ்வார் வாரி யெடுத்து என்னே எம்பெருமான் கருணை என்று உளமகிழ்ந்து, தம் அகத்தே சென்று 'கோதை' என்னும் பிள்ளைப் பெயரிட்டுத் தம் மகளாகவே வளர்த்து வரலானார். நெடுங்காலம் வறியவனாயிருந்த ஒருவன் பெருநிதியைக் கண்டால் எவ்வாறு களிப்படைவானோ அது போலவே ஆழ்வாரும் அரும் பெண்ணான கோதையைக் கண்டவாறே பெருமகிழ்வெய்தி அருமையாகச் சீராட்டி வளர்த்து வந்தார். உரிய காலத்தில் திருமாலின் இலச்சினையான திருவாழி திருச்சங்கங்களைப் பொறித்தும், ஞான நூல்களை உபதேசித்தும், திருமால் திருத்தொண்டில் ஈடுபடுத்தியும் வந்தார். இவ்விதம் ஞான பக்திகளாலே பொலிந்து நிற்கும் ஆண்டாள் பருவகாலத்தில் ஸ்ரீவில்லிப்புத்தூரிலுள்ள வட பெருங் கோயிலுடையான் கோயிலுக்குச் சென்று, அவ்வெம்பெரு மானுடைய வடிவழகில் ஈடுபட்டுத் தன்னை மறந்து பக்திப் பெருவேட்கை கொண்டு அவனையே தான் மணங்கொள்ளக் கருதி எப்பொழுதும் அத் திருமாலின் பெருமைகளையே பேசிவந்தாள்.

இங்ஙனம் ஓங்கி உலகளந்த உத்தமனிடத்துப் பேரன்பு பூண்டவ ளாகிய ஆண்டாள் தம் தந்தையான பெரியாழ்வார், வெளி யில் சென்றிருக்கும் வேளையில் அவர் வடபெருங்கோயிலுடையானுக்குத் தொடுத்து வைத்திருந்த மாலையைத் தான் அணிந்து கொண்டாள். மேலும் தன்னைப் பலவகையாக அணி செய்து கொண்டு அந்தக் கண்ணன் எம்பெருமானுக்குத் தான் ஏற்றவள்தானா என்று அடிக்கடி கண்ணாடியில் தன் அழகைப் பார்த்துக் கொண்டாள். பின்பு அக்கருமுகில் வண்ணனுக்கு ஏற்றவளே என்று ஒருவாறு தேறித் தன் தந்தை வருவதற்கு முன்பே, தாம் சூடிய மாலையைக் களைந்து பூக்கூடையிலே வைத்து விட்டாள். இவ்விதம் நாள்தோறும் மாலையைச் சூடி அழகு பார்த்து வந்த ஆண்டாள், திடீரென்று வந்த தந்தையாகிய பெரியாழ் வார் கண்ணில் பட்டுவிட்டாள். ஆழ்வாரும் அதனைக் கண்டு மிகவும்

வருந்தி ஆண்டாளைக் கடிந்து கொண்டார். எம்பெருமானுக்குக் கட்டிய மாலையை இவ்விதம் நீ அணிந்து அழகுபார்ப்பது பெரிய குற்றம் என்று கூறினார். அன்று அம்மாலையைப் பெருமாளுக்குச் சாத்தாமல் வேறு புதிய மலர்களைக் கொய்து மாலைகட்டிச் சாத்தியருளினார். அன்றிரவு பெருமாள் ஆழ்வார் கனவிலே தோன்றி நேற்றுவரை, நீர் சாத்தின மாலையில் நறுமணம் மிக்கு நமக்கு மிகவும் உகப்பாக இருந்ததே. இன்று அவ்விதம் இல்லையே என்று வினவினர். அதற்கு ஆழ்வாரும் நடந்ததைக் கூறினவளவிலே, பெருமாள், ஆண்டாள் சூடிக்கொடுத்த மாலையே நமக்கு மிகவும் விருப்பம் என்று அருளிச்செய்தார். உடனே கண்விழித்த ஆழ்வாரும் என்னே இறைவன் கருணை என்று வியந்து, அன்று முதல் ஆண்டாளைத் திருமகளின் அவதாரமே என்று கருதி, மலர் மாலையைத் தான் சூடிப்பின்பு பெருமாளுக்கு அளித்த காரணத்தால் 'சூடிக் கொடுத்த நாச்சியார்' என்று பெயரிட்டு அழைக்கலானார்.

கோதையாகிய நாச்சியாரும், ஞானபக்திகளாலே மிகவும் வளர்ந்து பருவம் வந்துற்ற காலத்தில் ஆழ்வார் மிகவும் கவலையோடு, இவளுக்கு ஏற்ற கணவன் கிடைப்பானோ என்று சிந்திக்கலானார். அதனையறிந்த ஆண்டாள் திருவாழியினையும், திருச்சங்கினையும் கைகளில் ஏந்தி நிற்கும் திருவரங்கப் பெருமானுக்கு அன்றி மானிடவர்க்கு வாழ்க்கைப் படேன் என்று உறுதியாகக் கூறினாள். அதைக் கேட்ட ஆழ்வார் ஆண்டாளின் மன உறுதியை வியந்து இவள் கருத்தை இறைவன் முற்றுவிப்பானோ என்று அரங்கன் செய்ய தாளிணைகளை நினைந்து வழிபட்டார். கோதையாகிய ஆண்டாளுடைய மனம் திருவரங்கநாதன் திருவருளையே நோக்கியது. அதனால் அப்பெருமாளின் மீது காதல் மிகுதியாகவே உணவை மறந்து, உடல் வாடி, கைவளைகள் கழன்று கண்ணீர் மல்கினாள். ஆழ்வாரும் தம் மகளாருடைய விரக வேதனையை உணர்ந்து அக்கண்ணன் கோயில் கொண்டுள்ள நூற்றெட்டுத் திருப்பதிகளின் வரலாறுகளையும் சுருக்கமாகச் சொல்லி அவற்றுள் திருவரங்கமே முதன்மையானது என்று அத்திருப்பதியின் பெருமையினையும் திருவரங்கத்தின்னமுதர் அருளையும் விரிவாகக் கூறி முடித்தார். இப்படித் தந்தையிடம் அரங்கன் பெருமைகளைக் கூறக் கேட்ட ஆண்டாள், முன்பு கண்ணபிரானுடைய பிரிவை ஆற்ற முடியாமல் கோபிகைகள் நோன்பு நோற்றது போலத் தானும் நோன்பு நோற்றுத் 'திருப்பாவை' நாச்சியார் திருமொழி' என்ற திவ்வியப் பிரபந்தங்களின் மூலமாக ஆற்றாமையை வெளியிட்டருளினார்.

இவ்விதம் ஆயர்பாடிக்கு அணிவிளக்காயும், கோவலர்தம் குலக் கொழுந்தாயுமுள்ள கண்ணபிரானைக் காதலித்த ஆண்டாளுக்கு எளிதில் அவன்கலவி கிடைக்கவில்லை. கண்ணன் மேல் காமுற்ற கோதை பிரிவாற்றாமையைத் தாங்க மாட்டாமல் காமனை நோக்கி, "உன்னையும் உம்பியையும் தொழுதேன்' நீ என்னைக் கண்ணபிரானோடு சேர்த்து வைக்கவேண்டுமென்று வேண்டினாள். திருமாலிருஞ்சோலை மணாளரும், காட்டில் வேங்கடம் கண்ணபுர நகர்' என்று திருவேங்கடத்திலும், திருக் கண்ணபுரத்திலும் எழுந்தருளியிருப்பவரும், மற்றும் வடமதுரை திரு வரங்கம் இன்னோரன்ன திவ்விய தேசங்களில் கோயில் கொண்டு எழுந் தருளியிருப்பவருமாகிய எம்பெருமான், தான் காதலிக்கும் கண்ணனே என்று நன்கு அறிந்தவளாகையாலே கோதை என்னும் பிள்ளைத் திரு நாமமுடைய ஆண்டாள் அல்லும் பகலும் அவன் நினைவாகவே பிதற்றிப் போது போக்கிக் குயிலையும் மேகத்தையும் தூதனுப்பி வந்தாள்.

இவ்விதமிருக்கையில் ஒரு நாள் கண்ணபிரான் ஆண்டாளுடைய விரகதாபத்தைக் கண்டு, அவளுடைய கைவளைகள் கழன்று, முகம் வெளுத்து, மேனி உலங்குண்ட விளங்கனி போலாகி, ஓர் முதலிலாமை யால் சோர்ந்திருக்கும் நிலைமையை எண்ணி, இனியும் 'சோதித்தல் தகாது' என்று கொண்டு கனவிலேயாவது இவட்கு நாம் காட்சி தந்து ஒருவாறு இவளைத் தேற்ற வேண்டுமென்று திருவுள்ளங்கொண்டான்.

கோதை கண்ட கனவு :

அன்றொரு நாள் காலை ஆண்டாள் ஆனந்தக் கூத்தாடினுள். ஊரெங்கும் மங்கலத் தோரணங்கள் கட்டப்பட்டன. வீடுகள் தோறும் பூரண கும்பங்கள் வைக்கப்பட்டன. "தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு வரும் கண்ணன், இன்று வாரணம் ஆயிரம் புடைசூழத் திருவீதிகளிலே வலமாக மிக்க பெருமிதத்தோடே வருகிருன். இக் காட்சியைக் கண்ட ஆண்டாள் தன் உயிர்த் தோழியிடம் ஓடினுள். இப்படித் தன் காதலன் ஊர்வலம் வரும் காட்சியைத் தான் கண்டதாகக் கூறினுள். இது மட்டுமா தோழீ! நாளைய தினம் கண்ணபிரானுக்கும் எனக்கும் திருக்கலியாணம் நிச்சயமாகியுள்ளதால் பாளைகளோடு கூடிய பாக்குமரங்களைப் பந்தலிற் கட்டியுள்ளார்கள். அத்தகைய அழகிய பந்தற்கீழ் மிகவும் மிடுக்கோடு மாதவன், கோவிந்தன் என்னும் பலபெயர் களையுடைய என் காதலன் புகுவதை நான் கண்டேன் என்ருள். மேலும் இந்திரன் முதலான தேவர்களெல்லாம் நிலவுலகே வந்து என்னை மணமகளாகப் பேசியும், அந்தரி என்னும் நாத்தனுர் எனக்குக் கலியாணப் புடவை உடுத்தியும், மணம்மிக்க மாலைகளைச் சூட்டியும் மகிழ யான் கனுக்கண்டேன் என்ருள்.

மேலும் தோழீ! நான்மறை வல்ல பார்ப்பனச் சிட்டர்கள் நான்கு திசைகளிலிருந்தும் புண்ணிய தீர்த்தங்களைக் கொணர்ந்து என்னைப் புனிதமாக்க, பின்பு மந்திர மொழிகளால் வாழ்த்திப் புனிதனுன கண்ண பிரானேடு இணைத்துக் கங்கணம் கட்டவும் நான் கனுக் கண்டேன். அழகிய இளம்பெண்கள் தீபங்களையும், பொற்கலசங்களையும் கையி லேந்தி எதிர்கொண்டழைக்க மதுரை மன்னனுன கண்ணபிரான் பூமி யெங்கும் அதிரும்படி பாதுகைகளை அணிந்து கொண்டு எழுந்தருளினுன். அப்போது மத்தளங்கள் முழங்கின. சங்குகள் ஊதப்பெற்றன. முத்து மாலைகள் தொங்குகின்ற பந்தலில் வேத மோதும் வேதியர்கள் மந்திர மொழிகளோடு ஓமத் தீவளர்த்துவிட மத்தகஜம் போன்ற கண்ணபிரான் என் கையைப் பிடித்துக் கொண்டு தீவலம் வரக் கனுக்கண்டேன் என்ருள். அன்றியும் இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் நாயகனுய் விளங்கும் நாராயணனுன கண்ணபிரான் செம்மையுடைய தன் திருக் கையாலே எனது தாளைப்பற்றி அம்மி மிதிக்கவும், என் தமையன்மார்கள் வந்து தீயின் முன்னே என்னை நிறுத்தி அச்சுதன் கைமேல் என்கையை வைத்துப் பொரிகளை அள்ளிப் பரிமாறவும் கனுக்கண்டேன் என்ருள். அதோடு மட்டுமின்றி, குங்குமக் குழம்பை உடம்பெல்லாம் பூசி, குளிர்ந்த சந்தனத்தையும் தடவி, பெரியதொரு யானையின் மேல் அக்கண்ண பிரானேடு அமர்ந்து அலங்கரிக்கப் பெற்ற திருவீதிகளிலே ஊர்வலம் வந்து மணநீரால் மஞ்சனமாட்டவும் கனுக்கண்டதாகக் கூறினுள். இவ்விதம் ஆயர்புத்திரனுன கண்ணனுக்குத் தான் வாழ்க்கைப் பட்ட தாகக் கூறிய ஆண்டாள் கனவு பின்பு நனவாயிற்று என்று சொல்லவும் வேண்டுமோ!

திருவரங்கச் செல்வனுன கண்ணன் பெரியாழ்வாருடைய கனவிலே தோன்றி ஆண்டாளைத் திருவரங்கத்துக்கு அழைத்து வருமாறு பணித் தான். அதுகேட்டுப் பெரியாழ்வாரும் பெருமகிழ்வு எய்தியிருக்கும்

நாளில் திருவரங்கத்திலிருந்து கோயிற்பரிசனங்கள் நவரத்தினப் பல்லக்கில் வேண்டிய வரிசைகளோடும், சத்திர சாமராதிகளோடும், மங்கள வாத்தியங்களோடும் குழாமாய் ஸ்ரீவில்லிப்புத்தூருக்கு வந்து பெரியாழ்வாரிடம் திருவரங்கன் கட்டளையைப் பணித்தனர். ஆழ்வாரும் மகிழ்ந்து அதற்கு இசைந்தனர். அச்செய்தியை அறிந்த ஸ்ரீவல்லப தேவன் என்னும் பாண்டியவரசன் ஸ்ரீவில்லிப்புத்தூருக்கும் ஸ்ரீரங்கத்துக்கும் நடுவிலுள்ள வழிகளைத் தோரணங்களால் அலங்கரித்துப் பூப்பந்தரிட்டுத் தண்ணீர் தெளித்து வாழை கமுகு முதலிய மரங்களைக் கட்டச் சொல்லித் தன் பரிவாரங்களோடு ஆழ்வாரையும் ஆண்டாளையும் தொடர்ந்து திருவரங்கத்தை அடைந்தான். இவ்விதம் ஆழ்வாரும் அரசனும் இருபுறத்தும் இடைவிடாதிருந்து அழைத்து வந்து பெரிய பெருமாளுடைய முன்மண்டபத்திலே கோதை நாச்சியாரை நிறுத்திப் பெருமாளை சேவிக்கப் பண்ணினர். தன் மெல்லடி சிலம்ப, சீரார் வளையொலிப்பப் பெடையன்னமென நடந்து திருவரங்கன் திருவடி வருடக் கருதிப், பாம்பணையின் மீதேறி அரங்கன் திருமேனியில் கலந்து மறைந்து 'அகலகில்லேன் இறையும்' என்கிறபடியே அவனைப் பிரியாது அவன் மார்பில் உறைபவளானாள்.

இவ்வண்ணம் ஆண்டாள் பெற்ற அரும்பேற்றை யாவரும் கண்டு களித்து அதிசயித்தனர். பெரியாழ்வார் "ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால் தான் கொண்டு போனான்" என்று கூறிக் கண்கலங்கினார். உடனே பெருமாள் அர்ச்சகர் மூலமாகப் பெரியாழ்வாருக்குத் தீர்த்தம், திருப்பரியட்டம் திருமாலை, திருவடி முதலியவைகளை அளித்து இன்று முதல் எனக்கு மாமனாராகி விட்டீர் என்று கூறி "வில்லிப்புத்தூர் உறைவானுக்கே தொண்டு பூண்டிரும்" என்று திருவாய் மலர்ந்து விடை கொடுத்தார். இவ்விதம் நம்பெருமாளையே கணவனாக விரும்பிப் பெற்ற கோதை என்னும் ஆண்டாள் சங்கத் தமிழ் மாலையாகிய திருப்பாவையையும், நாச்சியார் திருமொழி என்னும் திவ்வியப்பிரபந்தத்தையும் நாடும் நகரமும் உய்ய அருளிச் செய்து அருள் பாலித்தார்.

பாதகங்கள் தீர்க்கும் பரமனடிகாட்டும்
வேத மனைத்துக்கும் வித்தாகும்—கோதைதமிழ்
ஐயைந்து மைந்து மறியாத மானிடரை
வையஞ் சுமப்பதும் வம்பு.

என்று திருப்பாவையின் பெருமையை ஆன்றோர் போற்றியுள்ளனர். இனி ஆண்டாள் பிறந்த திருவாடிப் பூரத்தின் சீர்மையைப் பொய்யில்லாத மணவாள மாமுனிவன் வாக்கால் போற்றுவோமாக.

இன்றோ திருவாடிப் பூரம். எமக்காக
வன்றோ இங்காண்டாளவதரித்தாள்-குன்றாத
வாழ்வான வைகுந்தவான் போகம் தன்னையிகழ்ந்து
ஆழ்வார் திருமகளா ராய்.

அஞ்சுகுடிக் கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய்-பிஞ்சாய்ப்
பழுத்தாளை யாண்டாளைப் பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



# மெய்ப்பொருள் காண்பது அறிவு

## தமிழகத்து அறிவாராய்ச்சியியல் - தனிநிலையுணர்வு

[வித்துவான் திரு. வை. இரத்தினசபாபதி, எம்.ஏ., பி.ஓ.எல்.,]

**முன்னுரை :**

தமிழகத்து அறிவாராய்ச்சியானது உயிர்ப்பொருள்களின் வாழ்வை முழுமையாகக் கொண்டு நோக்கி முடிவு செய்யும் பொதுமை நோக்கைப் பெற்றிருந்தது என்பதைச் சென்ற இதழ்க் கட்டுரையிற் காண முடிந்தது. எனினும் தமிழர் தம் உள்ளத்தில், அறிவைப் பற்றிய ஆராய்ச்சியானது அதனோடு தொடர்பு கொண்டுள்ள பிறதுறைகளுடன் இணைந்த சார்பைப் பற்றிய ஆராய்ச்சியாக இல்லாமல், தனிநிலை உணர்வுடன் எழுந்த ஒன்றாகவே இயங்கி வந்தது என்பதை நன்கறிய முடிகிறது. அறிவாராய்ச்சியோடு இணைந்த சார்புத் துறைகள் யாவை? என்பதையும் அவற்றின் இணைப்பு இல்லாமலேயே தனிநிலையில் அறிவாராய்ச்சி எவ்வாறு இயங்கி வந்தது என்பதையும் இப்பகுதியிற் காணலாம்.

**மூன்று துறைகள் :**

அறிவின் இயலைப்பற்றி ஆராய முற்படுபவர்கள் பொதுவாக, அறிந்தோ, அறியாமலோ, தம்மை மூன்று துறைகளோடு இணைத்துக் கொண்டு விடுவார்கள். (1) ஒரு சிலர் அறிவு நிலையை உள்ளத்தின் செயற்பாடுகளுள் ஒன்று எனக்கருதி ஆராய முற்பட்டு, மெல்ல மெல்ல அறிவாராய்ச்சியை மனோதத்துவத்தோடு இணைத்துக் கொண்டு விடுவார்கள். (2) வேறுசிலர் அறிவாராய்ச்சியைத் தருக்கம் என்றும் பிரமாணம் என்றும் கிரேக்கச் சொல்லாகிய Logic என்றும் குறிப்பிடப் பெறுகின்ற அளவையியலோடு இணைத்து, அளவையியலோடு அறிவாராய்ச்சியையும் ஒன்றென அமைத்து விடுவார்கள். (3) இவ் விருவருக்கும் மாறுன வேறு ஒரு வகையினர் அடிப்படை வினக்கள் ஒரு சிலவற்றை முதன்முதலில் எழுப்புவர். நாம் யார்? நம்முடைய உள்ளங்கள் என்று சொல்லப் பெறும் பொருள் யாது? நம்மைச் சூழ்ந்துள்ள உலக அமைப்பு யாது? உள்பொருள் ஒன்ரு? பலவா? என்பன போன்ற அடிப்படை வினக்கள் இவர்களால் எழுப்பப்பெறும். இவர்கள் வினக்கள் பெரும்பாலும் அடிப்படைத் தத்துவங்களைப் பற்றியே இருப்பன ஆகையால் இவர்களை அடிப்படைத் தத்துவ இயல் வாதிகள் என்று அழைப்பதுண்டு. இவர்கள் அறிவாராய்ச்சியைப் பெரிதும் அடிப்படைத் தத்துவ இயலுடனேயே இணைத்துக் கண்டு மதிப்பிடுவார்கள்.

இவ்வாறு அமைக்கப் பெறும் மூவகையினரும் இணைத்துக் காணும் அறிவாராய்ச்சிகளை நாம் விளக்கம் காண்பதற்காக மூவகை இணைப்புப் பெயர்களால் குறியீடு அமைத்துக் கொள்ளலாம்.

(1) உள்ளத்தியலை ஒட்டியெழும் அறிவாராய்ச்சி
Pshychology and Epistemology

(2) அளவையியலை ஒட்டியெழும் அறிவாராய்ச்சி
Logic and Epistemology

(3) அடிப்படை தத்துவ இயலை ஒட்டியெழும் அறிவாராய்ச்சி
Metaphysics and Epistemology

மேலே குறிப்பிடப் பெற்ற மூவகையினரும் அறிவாராய்ச்சியை மேற்கொண்டவர்களே எனினும், சார்புணர்ச்சியின் காரணமாக, அறிவாராய்ச்சியைத் தனித்தே நடத்தாமல், பிறதுறைகளுடன் சார்த்தியே ஆராய்ச்சி செய்ய முற்பட்டு, காலப்போக்கில் அறிவாராய்ச்சியையே விட்டுவிட வேண்டியவர்கள் ஆனார்கள். இம்மூவகையினரும் தம்முடைய ஆராய்ச்சியைத் தொடக்கிய காலத்தில் அவர்கள் எழுப்பிய வினாக்களையும், காலப்போக்கில் அவர்கள் எழுப்பும் வினாக்களையும் முறையாகச் சிந்தித்தால் அவர்களின் போக்கானது திசைதிரும்பிப் போய்க் கொண்டிருக்கிறது என்பதை உணரலாம்.

**மேலைநாட்டுச் சிந்தனை :**

மேலைநாட்டுத் தத்துவ வரலாற்றைக் கூர்ந்து நோக்குவோமானால் ஒரு உண்மை விளங்கும். சாக்ரடீஸ், பிளேட்டோ ஆகியோர்களின் காலத்தேயும் அவர்களுக்கு முன்னேயும் விளங்கிய ஒருவகைச் சிந்தனையாளர்கள் சோபிஸ்ட்டுகள் (Sophists எனப்பெற்றனர். இவர்கள் வாத முறைகளை ஆராய்ந்து பார்த்தால் பெரும்பாலும் அறிவாராய்ச்சி இயலானது மெய்ப்பொருளியலிருந்து தோன்றியதாக அல்லது மெய்ப்பொருளியலின் ஒரு பகுதியாகவே அறிவாராய்ச்சியியல் இருந்ததாக நாம் கொள்ளலாம். ஆனால் கிரேக்க நாட்டுத் தலை சிறந்த தத்துவ ஞானிகளாகிய சாக்ரடீஸ், பிளேட்டோ போன்றவர்களின் உரையாடல்கள் அறிவாராய்ச்சியியலை விரிவாக விளக்கம் செய்கின்றன. இவர்களின் கருத்துக்களைக் கூர்ந்து நோக்கினால் மெய்ப்பொருளியலானது அறிவாராய்ச்சியியலிலிருந்து பிறந்த குழந்தை என்று கொள்ளலாம். எனவே அறிவாராய்ச்சியியலில் மெய்ப்பொருளியல் மனோ தத்துவ இயல் ஆகிய பலவும் பகுதிகளாக இணைந்து வருகின்றன எனக் கொள்ளலாம்.

மேலைநாட்டுச் சிந்தனையில் இச்சிக்கல்களை அல்லது அறிவாராய்ச்சியானது பிறதுறைகளோடு இணைந்து எழுப்பும் பிரச்சினைகளை முதன் முதல் தெளிவு படுத்த முற்பட்டவர் ஆங்கில நாட்டு மெய்ப்பொருளியல் வல்லவராகிய ஜான் லாக் (John-Locke கி.பி. 1632–1704) எனக் கொள்ளலாம். "மக்கள் அறிவைப்பற்றிய கட்டுரைகள்" (ESSAYS ON HUMAN UNDERSTANDING) என்றொரு நூல் எழுதினர். அதில் 'வாசகர்களுக்கு முடங்கல்' (LETTERS TO THE READERS) என்பது ஒரு பகுதி. அதில் ஒரு பகுதியை நாம் காணுதல் வேண்டும்.

" லாக் என்பவர் தம் இளமைக் காலத்தில் தம் நண்பர்களுடன் கூடி சில தத்துவப் பிரச்சினைகளை ஆராய முற்பட்டாராம். அப்போது நண்பர்களின் சிந்தனைகள் பயனற்ற வழிகளில் சென்றதை 'லாக்' உணர்ந்தாராம். அதனால் அவர் ஒரு முடிவுக்கு வந்தார். தத்துவக் கொள்கைகளை ஆராய்வதற்கு முன்னர் மனித அறிவைத் தனித்த நிலையில் ஆராய்தல் வேண்டும் என்பதே அவர் முடிவு. இதன் தொடர்பாக, மனித அறிவின் எல்லை எது? என்பதை வரையறுக்க வேண்டும் என்று கூறினர். அறிவினால் எவ்வெப்பொருளை உணர இயலும்? எவ்வெப்பொருளை உணர இயலாது? என்ற கேள்விகளை ஆராய்ந்து, அவைகளுக்கு விடைகாண வேண்டியது முக்கியக் கடமையாகும் என்றார்.

தத்துவ இயல் சம்பந்தமான எல்லாவகையான பிரச்சினைகளையும் விட, முற்பட்டதும், மூலமானதும் ஆகிய பிரச்சினையே 'அறிவியற் பிரச்சினை' இவர் எழுப்பிய இப்பிரச்சினை மேல்நாட்டுத் தத்துவ வரலாற்றில் ஒரு புதிய திருப்பத்தை உண்டாக்கி விட்டது என்று கூறலாம்

பதினெட்டாம் நூற்றுண்டிற்கும் பத்தொன்பதாம் நூற்றுண்டிற்கும் இடையில் விளங்கிய ஜெர்மானியத் தத்துவ ஞானி, அறிவாராய்ச்சியியலை மிகவும் ஆராய்ந்தார். ஆன்மா, உலகம், கடவுள் என்பன போன்ற தத்துவப் பொருள்களை அடிப்படையாகக் கொண்டு எழும் சிக்கல்களை ஆராய முற்படுவதற்கு முன்னர் மனித அறிவின் ஆற்றல் யாது? அவ்வறிவு அறிதற்குரிய பொருள்கள் யாவை? என்ற கேள்விகளை முதன் முதல் ஆராயவேண்டும் என்று 'ஜான் லாக்' என்பார் கூறிய கருத்தையே காண்ட் அவர்களும் கூறினர். மேலும் அவர்,

மனித அறிவிற்குரிய வரம்புகளை அல்லது எல்லைகளை (LIMITS) உணராமல் தத்துவப் பிரச்சினைகளுக்கு விடைகாண முற்படுவது, திசை காட்டும் கருவியும், விண்மீன்கள் திசைகள் இவைகளைப் பற்றிய அறிவும் இல்லாத ஒருவன் பரந்த கடலில் பிரயாணம் செய்ய வருவதைப் போன்றது என்றும் எடுத்துக் காட்டினர். அறிவாராய்ச்சியியலை விரிவாக ஆராய்ந்து இத்துறையில் பின்வந்தவர்களுக்கெல்லாம் வழி காட்டியாக விளங்கியவர் இவரே.

நம்நாட்டின் பொதுநிலை :

இந்திய நாட்டுத் தத்துவ வரலாற்றில் எல்லாத் தத்துவக் கொள்கை களிலும் பிரமாணங்களைப் பற்றிய ஆராய்ச்சியானது காணப்பெறுகிறது பிரமாணம் என்ற சொல் உண்மையான அறிவை, ஏற்புடைய அறிவைத் தருவது என்ற பொருளைத் தரும். பொதுவாக இவ்வாராய்ச்சியானது உண்மையான அறிவைப் பெறுவதற்குரிய வழிகள் யாவை? என்ற வினவையே ஆராய்கிறது. உண்மை அறிவைப் போலவே பிழைபடும் அறிவு அல்லது அறிவிற் பிழை எவ்வாறு உண்டாகிறது? என்பதையும் இப்பகுதி ஆராய்கிறது. 'நையாயிகர்' எனப்பெறும் தத்துவப் பிரிவினர் இப்பிரமாண ஆராய்ச்சியை விரிவாக ஆராய்ந்தவர் ஆவர். எனினும் எல்லா வகையான தத்துவப் பிரிவினர்களும், தம்முடைய தத்துவ ஆராய்ச்சியின் தொடக்கத்திலேயே, இப்பிரிவை அமைத்தனர். பொது வாகப் பிரமாண ஆராய்ச்சியைத் தத்துவ ஆராய்ச்சியின் நுழைவாயில் எனக் கூறலாம். ஆனல் அறிவாராய்ச்சியியலைத் தனித்துறையாக அமைத்து ஆராயும் முறை காணப் பெறவில்லை.

தமிழகத்துச் சிறப்புநிலை :

தமிழகத்தில் அறிவைப்பற்றிய ஆராய்ச்சியானது தனிநிலையில் உருவாகி வளர்ந்து வந்துள்ளது. அறிவுத் தெய்வம் என்று கலைமகளைக் குறிப்பிடும் வழக்கம் இருந்த போதிலும் விநாயகப் பெருமானை அறிவின் முதற்கடவுளாகக் கொண்டமை தெளியலாம். தத்துவ ஆய்வையோ மனோதத்துவ ஆய்வையோ, அளவையியல் ஆய்வையோ கொள்ளாமல் விநாயகப் பெருமானின் ஆய்வு தனிநிலையில் நிற்கும் அறிவாராய்ச்சியாகவே திகழ்வதைக் காணலாம். இதை எடுத்துக் காட்டுவதன் மூலம் தமிழகம் அறிவாராய்ச்சியியலைத் தனிநிலை ஆராய்ச்சி யாகக் கொண்டது என்று கூறுவது வாதத்திற்குப் பொருத்தமுடைய தாகாது. உலகியற் பொருள்களைப் பலவகைத் துறை ஆராய்ச்சியாளர் களும் பலவகைத் துறைகளில் பிரிவுபடுத்தியுள்ளனர். அவற்றுள் ஒன்று பொருள்கள், காட்டலாகும் பொருள்கள் எனவும், காட்டலாகாப்

பொருள்கள் எனவும் இருவகைப்படும் என்பது. காட்டலாகும் பொருள்களை ஆராய்ந்தமை போலவே காட்டலாகப் பொருள்களையும் ஆராய்ந்து வெளியிட்டுள்ளனர். 'அறிவு' காட்டலாகாப் பொருள். இக்கருத்தைத் தொல்காப்பியம், நன்னூல் போன்ற இலக்கண நூல்கள் கூறுகின்றன.

திருக்குறள் அற நூலாக, மக்களின் வாழ்வியல் நூலாகக் கூறப் பெறுகிறது. இதனுள் அறிவைப் பற்றிய தனி ஆராய்ச்சிகளை நாம் காணமுடிகிறது. பிளேட்டோ போன்ற கிரேக்கச் சிந்தனையாளர்களின் உரையாடல்களிலும், காண்ட் என்ற ஜெர்மானியத் தத்துவ அறிஞர் கூற்றுகளிலும் காணப்பெறும் வினாக்கள், சிந்தனைகள் திருக்குறளில் ஆராயப் பெறுகின்றன. எனவே, அறிவைப் பற்றிய-சார்பற்ற தனிநிலை ஆராய்ச்சியைத் தமிழர் மேற் கொண்டிருந்தார்கள் என்பதை அறிய லாம்.

முடிப்புரையும் தொடர்புரையும் :

மேலே குறிப்பிடப் பெற்றவாற்றால் தமிழகத்து அறிவாராய்ச்சியானது தனிநிலையுணர்வுடையதாகவே இருந்தது என்ற கருத்தைத் தோற்று வாய்க் கருத்தாகக் கொள்ளலாம். மேலை நாட்டுச் சிந்தனையில் 18-ஆம் நூற்றாண்டில், அறிவாராய்ச்சியைப் பிரித்தறிய வேண்டும் என்று எழுந்த ஒன்று தமிழகத்தில் மிக முற்பட்ட காலத்திலேயே ஆராயப் பெற்றதாக இருந்தது என்பதையும் அறியலாம். அடுத்த கட்டுரையில் அறிவாராய்ச்சியானது வேறு மூவகைத் துறைகளோடு கொண்டுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விரிவாக ஆராய்ந்த பின்னர், தமிழகத்தின் அறிவாய்வின்-தனிநிலையுணர்வைக் காண்போமாக.

---



---

திருவுரு உண்மை உணர்த்து

## நடராச வடிவ நலன்

[புலவர் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,]

முன்னுரை : நடராச வடிவம் நலங்கள் பலவும் நிறைந்தது; பழமையும் பெருமையும் வாய்ந்தது; தமிழ் நாட்டின் தனிப்பெரும் கலையியற் செல்வமாகக் கவினுற்றுப் புகழோங்கிப் பொலிவது; நடராசத் திருவுருவம் இடம்பெருத கோயில் எதுவும் இல்லை. எல்லாச் சைவக் கோயில்களிலும் நடராசத் திருவுருவம், சிறப்புற வைத்துப் போற்றி வழிபடப் பெற்று வருகின்றது. சிலப்பதிகாரம், கலித்தொகை போன்ற பழம் பெரும் சங்க காலப் பனுவல்களிலும், நடராசப் பெருமானைப் பற்றிய புகழுரைகள் காணப்பெறுகின்றன. "தீர்த்தம் என்பது சிவகங்கையே; ஏத்தரும் தலம் எழிற் புலியூரே; மூர்த்தி அம்பலக் கூத்தனது உருவே" என்று, நடராசப் பெருமானின் வடிவ நலனைக் குமரகுருபரர் வியந்து புகழ்ந்துள்ளார்.

தத்துவ நுட்பங்கள் : நடராச வடிவம் கலைநலம் சிறந்தது; கவர்ச்சி மிக்குத் திகழ்வது; அதன் ஒவ்வொரு பகுதியும் கவின்மிக்குப், பல தத்துவ நுட்பங்களை உள்ளடக்கிக் கொண்டு விளங்குகின்றது.

(1) நடராசப் பெருமானின் திருமுகமண்டலம் அவர்தம் தலைமை நிலைமை, எல்லையில்லா அழகும், இனிய தண்ணளித் திறனும் உணர்த்துகின்றது.

(2) பனித்த சடை : "நுண்சிகை ஞானமாம்" எனத் திருமூலர், திருமந்திரம் கூறுமாறு ஞானச் சிறப்பையும், "சைவம் விட்டிட்ட சடைகளும்," எனத் திருவிசைப்பாப் பாடல் கூறுதற்கேற்பச் சிவநெறிக்குரிய தவவொழுக்கச் சிறப்பையும் குறிக்கின்றது. "தமிழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோன்" என்பது அகநானூறு.

(3) கங்கையைத் தரித்தல் : "நில்லாத நீர் சடைமேல் நிற்பித்தான்" என அப்பர் பாடுதல் போல, இறைவனது பேராற்றலையும், வேகங்கெடுத்தாளும் வித்தகத்தையும் விளக்குகின்றது.

(4) பிறையணிதல் : தன்னைச் சரண் அடைந்தவர்களைத் தாங்கித் தாழ்வு நீக்கிப் பாதுகாக்கும் வள்ளல் என்று அறிவிக்கின்றது. 'தன் அடைந்தார்க்கு இன்பங்கள் தருவான்'; 'சார்ந்தவர்க்கு இன்பங்கள் தழைக்கும் வண்ணம் நேர்ந்தவன்' என்பர் சம்பந்தர்.

(5) குனித்த புருவம்: புருவத்தை வளைத்தல் நெறித்தல் முதலியன, பரதக் கலையில் வல்லவர்கள் தம் குறிப்புக்களை உணர்த்தும் மெய்ப்பாட்டு வகைகள் ஆகும். தன்பாற் போந்து குறையிரந்து முறையிடும் அடியார்களின் விண்ணப்பங்களைக் கூர்ந்து நோக்கி ஊன்றிக் கேட்டருளும் கருணைத்திறம் காட்டும்.

(6) குமிண் சிறிப்பு: தன் பக்கல்போந்து, அடைக்கலம் புகுபவர்களை 'என்று வந்தாய்' என்று அருளுடன் வரவேற்று, அவர்கள் செய்த பிழைகளை மன்னித்து, அவர்களுக்கு வாழ்வளித்து மகிழ்ச்சி விளைவிக்கும் மாட்சியை யுணர்த்தும்.

(7) பவளமேனி: பவளம்போற் சிவந்தமேனி, தீவண்ணன் ஆகிய இறைவன் நெருப்புப் போல்பவன் என்று நினைப்பிக்கும். நெருப்பானது தன்பால் எய்தும் பொருள்களை எல்லாம் தூய்மைப் படுத்திப் புனிதம் உறுவிக்கும். அதுபோல இறைவனும் தன்பால் அன்பு செய்வார் மாசுகளையெல்லாம் போக்கித் தூய்மையாக்கி அருள் புரிதலைப் புலப்படுத்தும்.

(8) பால்வெண்நீறு: எல்லாப் பொருள்களும் அழிந்து, இறுதியில் நீறு ஆகும். நீறு மற்றென்றாக மாறி அழியாது. ஆதலின், திருநீறு அழிவிலாத தன்மையையும், தூய இயல்பினையும் காட்டும். இறைவன் "தொழுதெழுவார் வினைவளம் நீறெழ நீறு அணிகின்றான்". அவன் "செந்நிற மேனியில் வெண்ணீறு" அணியும் கோலம், எவர் நெஞ்சையும் கவர்ந்து பிணிக்கவல்ல பெற்றிமையினைத் தெற்றெனத் தெருட்டும்.

(9) நெற்றிக் கண்: "நுதல்விழி நாட்டத்து இறையோன்" "நெற்றித்தனிக் கண் ஒருத்தன்" "மத்தகஞ் சேர்தனி நோக்கினன்" "கண்ணுதலான்" என்று சான்றோர்கள் போற்றும் நிலையிற் சிவபிரானுக்குரிய சிறப்பு அடையாளம். 'விருபாட்சம்' எனும்படி மேல்நோக்கிய நிலையில் நிமிர்ந்து நிற்கும் நெற்றிக்கண், சிவபிரானின் தனிப்பெரு முதன்மையினை நனியுணர்த்தும்.

(10) நீலகண்டம்: விண்ணோர் அமுது உண்டும் சாவ, ஒருவரும் உண்ணாத நஞ்சு உண்டும் இருந்து அருள் செய்யும் பெருந்தகை ஆகிய இறைவனின் நயத்தக்க நனி நாகரிக நலனையும், பெருங்கருணைத் திறத்தினையும் புலப்படுத்தும். "கறைமிடறு அணியலும் அணிந்தன்று அக்கறை பதினெண் கணனும் ஏத்தவும் படுமே" என்பது புறநானூறு.

(11) உடுக்கை: 'எண்டோள் வீசி நின்றாடும் பிரான்' என்றவாறு, நடராச வடிவத்திற்கு எட்டும், அதற்கு மேற்பட்டும் கைகள் அமைக்கப் படுதல் உண்டு. எனினும் பொதுவாக நான்கு கைகள் எங்கும் காணப் படும். அவற்றில் வலக்கை ஒன்றில், உடுக்கை (தமருகம்) ஏந்தியிருப்பது ஒலியை எழுப்பி அணுத்துகள்களைத் திரட்டி உலகப் பொருள்களைப் படைக்கும் நோக்குடன், இறைவன் பரநாதத்தைத் தோற்றுவிக்கும் பான்மையினைத் தெளிவிப்பது.

(12) நெருப்பு: உலகுயிர்களைப் படைத்த இறைவன், அவைகள் பிறந்தும் இறந்தும் துயருற்று வருந்தும் இளைப்பினை நீக்கும்பொருட்டுச் செய்யும் அழித்தற் றொழிலுக்கு அடையாளம். "அழிப்பு இளைப்பு ஆற்றல்" என்பது சித்தியார். இடக்கை ஒன்றில் நெருப்பு இருக்கும்.

(13) அமைத்த கை: இதனை 'அபய கரம்' எனவும் வழங்குவர். 'நீவீர் அஞ்சற்க, யாம் நும்மைக் காக்கின்றோம்' எனத் தன் அடியவர்களுக்கு ஆறுதல் கூறித் தேற்றும் நிலை ஆதலின், இவ் வலக்கை காத்தற் றொழிலைக் காட்டும்.

(14) வீசிய கரம்: இவ் இடக்கை, யானையின் துதிக்கையினைப் போன்று நீண்டு வளைந்து திகழ்தலின் 'கஜஹஸ்தம்' எனவும் வழங்கும், இக் கையின் விரல் தூக்கிய திருவடியைக் காட்டிக் கொண்டிருக்கும். "இந்தத் திருவடியை நம்பித் தொழுக; இஃது உம்மை ஈடேற்றும்" என்பது கருத்து. இக்கருத்தினைக் குமரகுருபரர் பின்வரும் பாடலிற் குறிப்பிட்டிருத்தல் காணலாம்:

> "கூடும் கதிஒருகால் கும்பிட்டாற் போதும்என
> நாடும் அபிநயத்தை நண்ணிற்றால்;—ஓடியகட்
> காதனர் காண, ஒரு கால்காட்டிக் கைஅமைத்து
> நாதனர் ஆடும் நடம்"

(15) எடுத்த திருவடி: இஃது இறைவனின் இடது திருவடியாகும் எனவே அஃது அம்மையின் பகுதிக்கு உரியது. அம்மை அருளே உருவமாகத் திகழ்பவள். "அருளது சத்தியாகும் அரன் தனக்கு" என்பது சாத்திரம். "துன்பக் கடலிடைத் தோணித்தொழில் பூண்டு தொண்டர் தம்மை இன்பக்கரை முகந்து ஏற்றும் திறத்தன" என அப்பர் தேவாரம் அறிவிக்குமாறு போல, பிறவிக்கடலில் விழுந்து தத்தளிக்கும் உயிர்களை அக்கடலினின்று எடுத்து மீட்டுக் காப்பாற்றும் அருளற் றொழிலுக்கு உரியது. "ஆட எடுத்திட்ட பாதம் அன்றோ நம்மை ஆட்கொண்டதே" என்பது அப்பர் திருமொழி.

(16) ஊன்றிய திருவடி: இஃது இறைவனின் வலக்கால்; ஆண் பகுதிக்கு உரியது. இது முயலகன் என்பவனை மிதித்து அடக்கும் வகையில், அவன் மீது ஊன்றிய நிலையில் அமைந்திருக்கும். நன்கு மிதித்து நசுக்கி விடாமலும், மிதியாமலே விட்டு விடாமலும், மெல்லென இறைவன் முயலகன் மீது நிற்கின்றான். இந்நிலைமை மலத்தை முழுதாக அழித்து விடாமலும், மலத்தால் உயிர்கள் பெரிதும் வருந்தாமலும், வினைப் பயன்களை உயிர்கள் நுகரச் செய்ய இறைவன் இயற்றும் மறைத்தற் றொழிலைக் குறிக்கும்.

(17) முயலகன்: இவனைப் பூதம், குறள், அசுரன், அபசுமாரன் முதலிய பெயர்களால் நூல்கள் வழங்கும். முயலகன் ஆணவ மலத்திற்கு அறிகுறி. ஆணவ மலம் என்றும் அழிவதில்லை. அதுபோலவே முயலகனும் இறைவன் திருவடிக்கீழ் என்றும் விளங்குகின்றான்.

இறைவனுக்குப் படிநிலையாய் அமைந்து உதவுதல் போல, முயலகன் காணப்படுகிருன். அதுபோல ஆணவ மலமும் உயிர்களின் இறையின்ப நுகர்ச்சிக்கு ஓராற்ருற் காரணமாகிறது. "இத்தை விளைவித்தல் மலம்" என்பது காண்க. "மாயாதே தன் சத்தி மாய்ந்து" முத்தி நிலையில் உயிர்களின்பால் ஆணவமலம் அடங்கிக் கிடப்பது போல, முயலகனும் இறைவனின் திருவடிக்கீழ் "மாயாதே தன் சத்தி மாய்ந்து" கிடக்கின்ருன்.

(18) தெற்கு நோக்குதல்: எல்லாத் திருக்கோயில்களிலும் நடராசப் பெருமானின் திருவுருவம் தெற்கு நோக்கியே அமைக்கப்பட்டிருத்தல் காணலாம். 'நம்பினவர்க்கு நடராசன் நம்பாதவர்க்கு எமராசன்' என வழங்கும் பழமொழிக்கு ஏற்ப, இறைவன் தன்னை வழிபடும் அடியவர் கட்குத் தெற்கே யிருந்துவரும் எமராசனல் யாதொரு துன்பமும் நேராமற் காத்தற் பொருட்டே, தெற்கு நோக்கி ஆடுகிருன் என்பர் பெரியோர். திருவிளையாடற் புராணம் இயற்றியருளிய பரஞ்சோதி முனிவர், தென்றற் காற்றின் மீதும், தென்றமிழின் மீதும் உள்ள விருப்பம் காரணமாகவே தெற்கு நோக்கி இறைவன் நடனம் புரிகின்ருர் என்று, குறிப்பிட்டுள்ளார்.

சைவசித்தாந்தம்: நடராச வடிவம் பற்றிய பல தத்துவ நுட்பங்களைக் குறித்துச் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினன்கனுள் ஒன்றும், திருவதிகை மனவாசகங்கடந்தார் என்பவர் இயற்றியதும் ஆகிய "உண்மை விளக்கம்" என்னும் உயரியநூல், பின்வருமாறு அழகுற உணர்த்துகின்றது.

(1) இறைவனின் உடுக்கையால் ஆக்கல்; அமைந்த கையாற் காத்தல்; ஏந்திய நெருப்பினல் அழித்தல்; ஊன்றிய திருவடியால் மறைத்தல் (திரோபவம்); எடுத்த திருவடியால் அருளல் (முத்தி, அனுக் கிரகம்) ஆகிய ஐந்து தொழில்கள் நடைபெறுகின்றன.

(2) இறைவன் தனது துடியைக் கொட்டுவதால் ஆன்மாக்களின் மாயையினை உதறுகிருன்; ஏந்திய நெருப்பினுற் கன்ம மலத்தினைச் சுடுகிருன்: ஊன்றிய திருவடியால் ஆணவ மலத்தினை அழுத்தித் தேய் விக்கிருன்; தூக்கிய திருவடியால் உயிர்களைப் பிறவிக் கடலினின்று எடுக்கின்ருன்; அபயகரத்தால் உயிர்களை இன்பக் கடலில் திளைக்கச் செய்கிருன்; இத்தகைய திருநடனத்தைக் கண்டு விரும்பித் தொழுபவர் களுக்குத் பிறவித் துயர் இல்லாமல் நீங்கும்.

(3) இறைவன் ஐந்தொழிற் திருக்கூத்து இயற்றுங்கால், அவனது திருமேனி ஐந்தெழுத்தினுலேயே அமைகின்றது. இறைவன் 'மந்திர சொரூபி' யாதலின், அவன்றன் திருவுருவம் திருவைந்தெழுத்து மந்திரத்தினுலேயே அமைவதாகின்றது. 'நமசிவய' என்பது தூல பஞ்சாக்கரம். திருவடியில் ந; வயிற்றில் ம; தோளில் சி; முகத்தில் வ; திருமுடியில் ய. இவ்வமைப்பு 'தூல பஞ்சாக்கரம்' எனவும், 'இலயாங்கம்' எனவும் கூறப்படும்.

(4) இனி 'சிவயநம' என்பது சூக்கும பஞ்சாக்கரம் என வழங்கும். அது நடராச வடிவத்தில் பின்வருமாறு அமைந்து விளங்குகின்றது; துடியில் சி; வீசும் கரத்தில் வ; அபயகரத்தில் ய; ஏந்துகின்ற நெருப்பில் ந; அடிக்கீழ் முயலகனில் ம. இவ்வமைப்பு 'போகாங்கம்' எனப்படும்.

முடிவுரை :

உலகப் புகழ்பெற்ற கலையியற் பேரறிஞர் ஆகிய திரு. ஆனந்தகுமார சுவாமி அவர்கள், "நடராச வடிவத்தினை, இந்நாளில் எத்தகைய பெருங் கலைஞனும் கூட, கருதியுணர்ந்து படைத்தல் இயலாது. இது வெறும் கவிதையன்று. அறிவியல் நலமும் அமைந்தது. இத்திருவுருவம் பக்தர்களுக்கும், பாமரர்களுக்கும், விஞ்ஞானிகளுக்கும், மெய்ஞ்ஞானி களுக்கும் எல்லாம், பெரு வியப்பையும் பேரீடுபாட்டையும் விளைவித்து மகிழ்வித்து வருகின்றது. காலமும் இடமும் கடந்து, எல்லா நாடு மொழி சமயம் சார்ந்த மக்களாலும் போற்றப்படத் தக்கதாய்த் திகழ்கின்றது. இனைய பல அரும்பெருஞ் சிறப்புக்கள் மிக்க இத்திருவுருவத்தினை, முதன் முதற் கருதிப் படைத்து உதவிய அருட்பெருஞ் சான்றோர்கள் ஆகிய கலைஞர்களின் நுண்மாண் நுழைபுலம், சாலவும் வியந்து போற்று தற்குரியது. எனவே எத்தனையோ பல தலைமுறைகளாக நடராச வடிவம் மக்களின் உள்ளங்களையெல்லாம் கவர்ந்து நின்று, வழிபடப் பெற்று வருவதில் வியப்பொன்றுமில்லை. எவ்வளவோ ஐயப்பாடுகள் கொள்ளுவதிலும், எத்துணையோ பல குறைபாடுகளைக் காண்பதிலுமே பழகிப் பயின்றுள்ள நாமும்கூட, நடராசரை வழிபட்டுத்தான் வருகின் றோம். நடராச வடிவம் கலைநலம் சிறந்து கவர்ச்சிமிக்குத் திகழ்வது. அதன் ஒவ்வொரு பகுதியும் கவின்மிக்குப் பல தத்துவ நுட்பங்களை உள்ளடக்கிக் கொண்டு, ஒளிவிட்டு விளங்குகின்றது" * என்று புகழ்ந்து போற்றி மகிழ்ந்து இன்புறுகின்றார். இத்தகைய சிறப்புமிக்க நடராசப் பெருமானின் திருவடிகளை, அயரா அன்புடன் வழிபட்டு, நாம் அனைவரும் நலம் பலவும் பெற்று உய்வோமாக.

---

* "Every part of such an image as this, is directly expressive not of any more superstition or dogma, but of evident facts. No artist of today, however great, could more exactly or more wisely create an image of that Energy which science must postulate behind all phenomena, It is poetry, but nevertheless the truest science."

"This is an image of reality, a key to the complex tissue of life, a theory of nature, not merely satisfactory to a single clique or race, not acceptable to the thinkers of one century only, but universal in its appeal to the philosopher the lover and the artist of all ages and countries......"

—Dr. Ananda K. Coomaraswamy.

# பழந்தமிழ் இலக்கியத்தில் இராமாயணம்

திரு. எம்.ஏ. முருகேசன், பி.ஏ., பி.எல்.,
துணை ஆணையாளர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை.

திருமகள் கேள்வனை திருமால் மானிட உருக்கொண்டு, இப் புண்ணிய பூமியில் நடந்து மண்ணிடை மாதவம் அறத்தொடு வளர்த்த கதையைத் தான் இராமாயணம் என்கின்றோம். இக்கதையைக் காப்பிய மாக முதன் முதலில் செய்தவர் வான்மீகி முனிவர் என்பதும், அவர் செய்த அக்காப்பியம் ஆதி காவியம் என்பதும் எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மை. அதைத் தழுவி, கூட்டியும் குறைத்தும், விரித்தும் சுருக்கியும், ஒப்பற்ற ஓர் உன்னத காவியம் படைத்து அதற்கு "இராமாவதாரம்" எனப் பெயரிட்டார், கல்வியில் பெரிய கம்ப நாட்டாழ்வார்.

வான்மீகியைத் தழுவியே கம்பன் தன் காவியத்தை அமைத்தான் என்பதற்கு அவன் காவியத்திலேயே அகச்சான்றுகளும், வெளியே புறச் சான்றுகளும் நிறையக் கிடக்கின்றன.

"வையம் என்னை இகழவும், மாசு எனக்கு
எய்தவும், இது இயம்புவது யாது எனின்
பொய் இல் கேள்விப் புலமையினோர் புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே" என்பதும்

"வாங்க அரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி என்பான்
தீங்கவி செவிகள் ஆறத் தேவரும் பருகச் செய்தான்,
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை, அன்பு எனும் நறவம் மாந்தி,
மூங்கையான் பேசலுற்றான் என்ன, யான் மொழியலுற்றேன்,"

என்பதும் கம்பன் வாக்கு.

"நாரணன் விளையாட்டெல்லாம் நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தான், அறிந்த வான்மீகி என்பான்,
சீர் அணி சோழநாட்டுத் திருவழுந்தூருள் வாழ்வோன்
கார் அணி கொடையான் கம்பன், தமிழினால் கவிதை செய்தான்"

என்பது தனியன்.

இராமாயணத்தை முதன் முதலில் பாடியவர் வான்மீகியே என்று ஒப்புக்கொண்ட போதிலும் இன்னும் இருவர் பாடியிருக்கலாம் என்பது கம்பனுடைய வாக்கினாலேயே தெரிகிறது. பாயிரத்தில் நூல் வழி சொல்ல வந்த கம்பர்,

"தேவபாடையின் இக்கதை செய்தவர்
மூவரானவர் தம்முளும், முந்திய
நாவவின் உரையின்படி, நான் தமிழ்ப்
பாவினால் இது உணர்த்திய பண்பு அரோ."

என்று பாடுகிறார். இப்பாடலால் வடமொழியில் இராமாயணம் செய்த வர் மூவர் என்பதும், அம்மூவரில் முதல்வர் பாடியதைக் கம்பர் தமிழில் ஆக்கினார் என்பதும் பெறப்படுகிறது. வான்மீகி, விசுவாமித்திரர், வசிட்டர் என்பவர்களே அம்மூவர் என்று கூறப்படுகிறது. ஆகவே, தமிழில் கம்பர் இராமாயணம் பாடுவதற்கு முன்பு வடமொழியில் மூன்று இராமாயணங்கள் இருந்திருக்க வேண்டுமென்று கருத இடம் இருக்கிறது.

ஆதி காவியத்தைப் பின்பற்றி எழுந்த இராமாவதாரமே, முதன் முதலில் தமிழில் எழுதப்பட்ட இராமாயணம் என்றும், அதன் பிறகே, தமிழ் நாட்டிற்கு இராமகாதை வந்தது என்னும் ஒரு கருத்து நிலவுகிறது. ஆய்ந்து பார்க்கின், கம்பனுடைய இராமாயணத்திற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே, இராம காதை தமிழ் நாட்டில் மிகப் பரவலாக மக்களிடத்திலே வழங்கி வந்தது என்பதற்கு நிறைய ஆதாரங்கள் இருக்கின்றன. பாட்டிலும், தொகையிலும், அதைச் சார்ந்த பல பண்டைத் தமிழ் நூல்களிலும் "இராமாயணம்" பேசப்பட்டிருக்கிறது. சங்கப் புலவர்களில் வான்மீகனுர் என்ற பெயர் கொண்ட புலவர் ஒருவர் இருந்தார் என்பது, தொல்காப்பியம், பொருள் அதிகாரத்தில், புறத்துறையில் "அறுவகைப் பட்ட பார்ப்பனப்பக்கமும்" என்ற சூத்திர உரையில் நச்சினுர்க்கினியனுர் கூறுவதிலிருந்து அறியப்படுகிறது.

புறநானூற்றிலே 358-ஆம் பாட்டு வான்மீகனுர் பாடிய பாடல் என்று காணப்படுகிறது :

"ஆள் வினை முடித்த அருந்தவ முனிவன்
வேள்வி போற்றிய விராமனவனெடு
மிதிலை மூதூ ரெய்திய ஞான்றே
மதியிடம் பட்ட மாக்கட் சீதை
கடுவிசை வின்நாணிடியொலி கேளாக்
கேட்ட பாம்பின் வாட்டமெய்தித்
துயிலெழுந்து மயங்கின விதான்று."

(தொல்-பொருள் 54 உரை நச்சினுர்க்கியனுர்)

இனி, அகநானூற்றிலும், புறநானூற்றிலும் "இராமாயணம்" பேசப் படுவதைக் காணலாம்.

புறம் 378-ஆவது பாடலில்

"கடுந்தெறலிராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வவ்விய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்படு பெருங்கிளை இழைப்பொழிந்தாஅங்கு

என வருகிறது.

அகநானூறு 70-ஆவது பாடலில்

"வெள்வேற்கவுரியர் தொன்மிகு கோடி
முழங்கிடும் பவ்வம் இரங்கு முன்துறை
வெல்போர் இராமன் கலித்த
பல்வீலாலம் போல"

என்று வருகிறது.

எட்டுத் தொகை நூல்களில் ஒன்ருகிய பரிபாடலில் அகலிகை பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

"இந்திரன் பூசை இவர் அகலிகை இவள்
சென்ற கவுதமன் இனமுறக் கல்லுரு
ஒன்றிய படியிது......................." (பரிபாடல் 19வரி 50-52)

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்ருகிய திருக்குறளில் அகலிகை கதை பேசப்படுகிறது. பிறர் மனை நயத்தலை இகழ வந்த வள்ளுவர்

"ஐந்தவித்தானுற்ற லகல்விசம்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி".

சங்க இலக்கியங்களுக்குப் பிற்பட்ட ஐம்பெருங்காப்பியங்களிலும் இராமாயணம் பரவலாகப் பேசப்படுகிறது.

சிலப்பதிகாரம் ஊர்காண் காதையிலே

" தாதை ஏவலின், மாதுடன் போகி
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீ அறிந்திலையோ? நெடுமொழி அன்றோ ?

என்று இளங்கோவடிகள் பாடுகிறார்.

பின்னும், ஆய்ச்சியர் குரவையில்

" மூவுலகும் ஈரடியான் முறை நிரம்பாவகை முடியத்
தாவிய சேவடி சேப்ப, தம்பியொடும்கான் போந்து
சோ அரணும் போர்மடியத் தொல் இலங்கை சுட்டழித்த
சேவகன் சீர்கேளாத செவி என்ன செவியே ?
திருமால் சீர்கேளாத செவி என்ன செவியே ?

என்றும் அடிகள் பாடுகிறார்.

இவ்வரிகளிலிருந்து, இராமன் திருமாலின் அவதாரம் என்றும், அவ் வழக்கு நீண்ட நெடுங்காலமாக (நெடுமொழியாக) நின்று நிலவி வந்தது என்பதும் காணக்கிடக்கிறது.

இரட்டைக் காப்பியங்களில் ஒன்றாகிய மணிமேகலையில்,

" நெடியோன் மயங்கி ஒன்றாகிய நிலமிசைத் தோன்றி
அடவிரு.........................................
குரங்கு கொணர்ந்தெறிந்த நெடுமலையெல்லாம்
அணங்குடை யளக்கர் வயிறுபுக்காங்கு "

என்று இராமாயண நிகழ்ச்சி ஒன்றைச் சாத்தனார் எடுத்தாளுகிறார்.

உரை ஆசிரியர்களும் தத்தம் உரைகளிலே வெண்பாவிலும் ஆசிரியப் பாவிலும் இராமாயண நிகழ்ச்சிகளைக் கூறும் பாடல்களைக் காட்டி யுள்ளனர் ஆசிரிய மாலையிலிருந்து புறத்திரட்டில் தொகுக்கப்பட்ட பாடல்களில் இராமாயண நிகழ்ச்சிகள் உள்ளன.

இது தவிர புறத்துறைக்கு எடுத்துக் காட்டுக் கூற வந்த உரை ஆசிரியர்கள் இராமாயண நிகழ்ச்சிகளைக் கூறியுள்ளனர்.

தொல்காப்பியம் புறத்துறையில் 12-ஆம் சூத்திரத்தில், எயிற்கோடல், எயிற் காத்தல், தானைமறம், என்ற துறைகளுக்கு இராமாயண நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டியிருக்கின்றனர்.

" கட்டினித்த பால் " என்ற துறைக்கு நச்சினார்க்கினியனார் இராமா யண வரலாற்றை எடுத்துக்காட்டி உள்ளார். பின்னும், இராமன் வீடண னுக்கு முடிசூட்டியதை " பொல்லார்த்தேயம் குறித்த கொற்றம் " என்ற புறத்துறைக்கும், " இன்று போய்ப் போர்க்கு நாளை வா " என்று இராகவன் இராவணனுக்குச் சொன்னதை " தழிஞ்சி" என்ற புறத்துறைக் கும் எடுத்துக் காட்டாகக் காட்டியுள்ளார். புறத்திரட்டு 20-ஆம் சூத்திர உரையில் " இராமாயணமும் பாரதமும் போல்வன இலக்கியம் " என்று கூறுகிறார்.

தொன்மை என்னும் வனப்பிற்கு "பாரதம், இராமாயணம் முத லானமை கொள்க " என்று சொல்கிறார். இவ்வுரையில் குறிப்பிடப்படும் இராமாயணம் கம்பனுக்கு முன் உள்ள நூலாகவும் இருக்கலாம். பெருந் தொகையில், முது புலவர் மு. ராகவையங்கார் அவர்கள் உரைகாரர்

காட்டிய பாடல்களைப் பழைய இராமாயணம் என்று கூறுகிறார். இவற்றையெல்லாம் பார்க்குமிடத்து, பழைய இராமாயணம் ஒன்று தமிழில் இருந்திருக்கலாமென்று கொள்ளவும் இடமிருக்கிறது. அப்படி இல்லாமற் போனாலும், இராமாயண நிகழ்ச்சிகளைப் பொருளாகக் கொண்டு தனிப் பாடல்கள் பல வழங்கி வந்தன என்பதில் ஐயத்துக்கே இடமில்லை.

சைவ வைணவ சமய இலக்கியங்களிலும் இராமாயணம் பேசப்படுகிறது. பிரபந்தம் பாடிய பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராகிய குலசேகர ஆழ்வார், தன்னைத் தயரதனாகவும், இராமனைத் தன் மதலையாகவும் பாவித்துப் பல பாடல்களைப் பாடி இருக்கின்றார்.

“மன்னு புகழ் கோசலை தன் மணிவயிறு வாய்த்தவனே
எங்கள் குலத்தின்னமுதே இராகவனே”

என்பதும்,

“அங்கணெடு மதில்புடைசூழ் அயோத்தி என்னும்
அணி நகரத்துலகனைத்தும் விளக்கும் சோதி
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி
விண் முழுதும் உய்யக்கொண்ட வீரன் தன்னைச்
செங்கண் நெடுங்கருமுகிலை இராமன் தன்னைத்
தில்லை நகர் திருச் சித்திரகூடந்தன்னுள்
எங்கள் தனி முதல்வனை எம்பெருமான் தன்னை
என்றுகொலோ கண்குளிரக் காணுநாளே”

என்பதும் அவர் வாக்கு.

ஆச்சாரியார் காலத்திலும் இராமசரிதம் மிகப் பரவலாக இருந்திருக்கிறது என்பதும் அவர்கள் செய்த வியாக்கியானத்திலிருந்து தெரிய வருகிறது.

“படி கொண்ட சீர்த்தி இராமாயணம்—
என்னும் பக்தி வெள்ளம்
குடிகொண்ட கோயில் இராமாநுசர்”

என்று உடையவரை திருவரங்கத்தமுதனார் தமது முன்னுரையில் கூறுகிறார்.

சைவ சமயச்சாரியார்கள் சிவனையன்றி மற்றவர்களைப் பாடுவதில்லை. அப்படிப் பாட நேர்ந்தாலும் சிவனோடு தொடர்பு படுத்தியே பாடுவர். “நம் செந்தில் மேய வள்ளி மணாளர்க்குத் தந்தை” என்பது போல்.

அப்படிப் பாடிய நால்வருள் மாணிக்கவாசகர்

“ஆர்கலி சூழ் தென்னிலங்கை
அழகமர் வண்டோதரிக்கு
பேரருள் இன்பம் பயந்தபிரானை”

என்று குயில் பத்திலே கூறுகின்றார்.

தமிழ் நாட்டில் இராமாயண வரலாற்றோடு தொடர்புடையனவாகப் பல ஊர்கள், மலைகள் முதலியவற்றைக் குறிப்பிட்டுக் கதைகள் இருக்கின்றன. இராமாயண பாத்திரத்தில் வரும் பெயர்களும் வழக்கத்தில் இருக்கின்றன. இவை எல்லாம் தமிழகத்தில் இராமகாதை மிகவும் பரவி மக்கள் மனதில் நிலவி வந்தது என்பதற்குரிய அடையாளங்களாகும்.

இவையெல்லாம், கம்பனுடைய இராமாயணத்துக்கும் முன்பே தமிழகத்தில் இராமகாதை மிகவும் பரவி வழங்கியிருந்தது என்பதையே காட்டுகின்றன.

# கல்வெட்டுக்களில் திருக்கோயில்

[திரு. கே. ஸ்ரீதரன், எம்.ஏ.,]

**கோயிலுக்கு அளிக்கப்பெற்ற கொடைகள்.**

கோயிலைக் கட்டி விட்டால் மட்டும் போதாது. கோயிலில் தினந்தோறும் பூசைகளும், வழிபாடும் நடக்கவேண்டும். அக்காலத்தில் மன்னர்களும் மற்றோரும் இறைவனின் தினசரி வழிபாட்டிற்காகத் தானம் அளித்தனர். அவ்வாறு தானம் அளித்தது எந்த எந்தப் பொருள்களுக்காக என்பதையும் தெரிந்து கொள்வோம்.

அம்பலவன் பழுவூர் நக்கன் என்பவன் அளித்தநிலவருவாய் இரண்டு வேளைகளிலும் திருவமுதுக்கு அரிசிக்கும், பொறிக்கறியமுது, நெய்யமுது தயிரமுது, அடைக்காயமுது, சந்தனம், கற்பூரம் ஆகியவற்றுக்கும், ஆடியருள பாலுக்கும், நந்தாவிளக்கு ஐந்துக்கும், ஆடைக்கும் சிறுகாலை எட்டு, உச்சிப்பொழுதில் எட்டு, இரவுக்கு 14 சந்தி விளக்குகளுக்கும் பயன்பட்டது. (175 of 1929). இவ்வாறு கோயிலுக்கு அளிக்கப்பட்ட வரியில்லாத நிலம் தேவதானம் எனப்படும்.

உத்தம சோழன் மகன் மதுராந்தகன் கண்டராதித்தன் 14-ஆம் ஆண்டுக் கல்வெட்டு திருமாற்புரத்து இறைவனுக்குத் திங்கள் தோறும் 108 குடங்கள் தேன், நெய், தயிர் அபிடேகம் செய்ய நிபந்தம் அளிக்கப் பட்டது (280 of 1906) எனக் கூறுகின்றது.

கோப்பெருஞ்சிங்கன் திருவதிகைக் கல்வெட்டு திருவெண்ணெய் நல்லூரில் தன்னை ஆட்கொண்ட தேவற்கு திருமஞ்சனம் செய்வதற்காக ஐம்பதரைக் கழஞ்சு எடையுள்ள வெள்ளிக்குடம் ஒன்றைப் பரிசாக அளித்தான் எனக் கூறுகின்றது. (467 of 1921) மேலும் திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்கு வைரங்கள் பதித்த பொன்னாலாகிய திருமஞ்சனக் குடம் அளித்தான்.

கோனேரிராஜபுரம், கோயிலில் பொறிக்கப்பட்ட சாசனம் கோயில்களுக்கான செலவுகள் என்னென்ன என்பதை விரிவாகக் கூறுகின்றது. இது உத்தமசோழன் 8-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, கடவுளின் திரு அமுதுக்காக, சந்தனக் குழம்புக்காக, விளக்குக்கு, ஸ்ரீ பலி என்னும் காரியம் செம்பியன் மாதேவி பிறந்த நாளில் செய்ய, கல்வியில் சிறந்த பிராமணருக்கு, சந்தனக்குழம்பு தயாரிப்பவனுக்கு, வெளியூர்களிலிருந்து வரும் பிரயாணிகள் தங்கவும், ஊர்வலத்தில் கடவுளுக்கு மேல் குடை பிடித்து வருபவனுக்கு, பூக்களைத் தொடுத்து மாலை கட்டுபவனுக்கு, நந்தவனம் பாதுகாப்பவனுக்கு, திருப்பதிகம் ஓதுபவருக்கு, கோயிலில் கணக்கு எழுதுபவர்க்கும், அதைச் சரிபார்ப்பவர்க்கும், பானைகளை கோயிலுக்குக் கொடுப்பவனுக்கும், இறைவனுக்கு வேண்டிய துணிகளை நெய்பவருக்கு, இறை உருவங்களை அபிடேகம் செய்ய நீர் கொண்டு வருபவருக்கு, கோயில் திருப்பணிக்கு, தினச் சோதிடம் பார்ப்பவர்க்கு, கோயில் சிற்பி, தச்சன், கொல்லன் ஆகியோர்க்கு மற்றும் கோயில் ஊழியரின் வீட்டிற்காகச் செலவு செய்ய வேண்டும் எனக் கூறுகிறது.

திருநாகேசுவரம் கல்வெட்டில் வீரநாராயணியார் என்னும் அரசகுமாரி கோயில் பெருமானுக்கு பூமாலை கட்டுவதற்கு நிலம் அளித்தாள். நரலோக வீரன் திருவாரூர் திருமூலட்டானமுடையாருக்கு செங்கழுநீர் மாலைகள் அளிக்க நிலமளித்தான். (563 of 1904) கோப்பெருஞ்சிங்கன் தில்லைப்பெருமானுக்கு திருப்பரிவட்டம் வழங்கும் தொழிலாளருக்கு

வீட்டுக் குடியிருபபு நிலத்திற்காகக் கொடையளித்தான் (303 of 1913). மேலும் அவன் தில்லைச் சிவகாமியம்மனுக்கு குங்குமம் வழங்குவதற்காக வும் (396 of 1903), திருத்தேர் விழாவிற்கும், பூசைத் திரவியங்கள் (455 of 1903) ஆகியவற்றுக்காக கொடை அளித்தான் எனக் கூறுகின்றது. முதலாம் இராசாதிராசன் ஆணைப்படி திருவாரூர் வீதி விடங்கப் பெரு மானுக்கு பொற்பல்லக்குச் செய்யப்பட்டது. (548 of 1904).

திருவெண்காடு பெருமாள் கோயிலின் கோசாலைக்கு (பசுமடம்) மலை நாட்டிலுள்ள கொடுங்கோளூர் வாசி ஒருவர் நிலமளித்தார் (465 of 1919)

சேந்தன் காரி என்பவனின் மகளுக்கு வாரிசு இல்லை. அவ்வூரில் குடிகொண்டு இருக்கும் இறைவியையே தன்னுடைய மகளாக ஏற்றுக் கொண்டாள். அவள், இறைவி-இறைவன் திருமணத்தைக் கொண் டாடினாள். மேலும் இறைவியின் நாள் வழிபாட்டுக்குத் தனக்கு ஸ்ரீ தனமாகக் கிடைத்த நிலத்தை அளித்தாள். இதை முதற் பராந்த கன் காலத்து குமாரவயலூர்க் கல்வெட்டுக் கூறுகின்றது.

கோயிலில் ஸ்ரீ பலி என்ற சடங்கு நடக்கும். வாத்தியம் முழக்கிச் சோறும் பூவும் குறித்த இடங்களில் தூவுதல் ஸ்ரீ பலி என்னும் சடங்கா கும். இதற்கு நிபந்தம் விட்டதாக ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது. (363 of 1909).

அக்காலத்தில் நகைகளும் செய்து இறைவிக்கு அணிவிக்கத் தான மளித்தார்கள். உத்தமசோழன் 7-ஆம் ஆட்சியாண்டில் அம்பழுவூர் நக் கன் கோவிந்த புத்தூர்க் கோயிலில் உள்ள ஆடவல்லான் பெருமானை யும், உமா பட்டாரகியையும் எழுந்தருள்வித்து அவர்களுக்கு பொன் அணிகலன்களை அளித்தான் என அவ்வூர்க் கல்வெட்டுக் கூறுகின்றது. (163 of 1929). இராசராசன் தமக்கையான குந்தவையார் தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள உமாபரமேசுவரியார்க்கு அணிகலன்கள் அளித்தார். அவைகளின் பெயர்களைக் கல்வெட்டுக் கூறுகின்றது. அவையாவன; திருமகுடம், வாளிகள் (காதணிகள்), உழுத்து இரண்டு, திருமாலை, ஸ்ரீ வாகுவலயம், ஸ்ரீ சந்தம், திருக்கைப் பொட்டு இரண்டு, சூடகரம் (கையில் அணியும் அணிகலன்) என்பன. முதலாம் இராசராசன் தஞ்சைக் கோயிலுக்கு அளித்த அணிகலன்களைப் பற்றியும், அதன் நிறைகளைப் பற்றியும் விரிவாகத் தஞ்சைக் கோயில் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

கோயில் அதிகாரிகள்: அக்காலத்தில் கோயில் காரியங்களைக் கவனிப்பதற்கு ஒரு குழு இருந்து வந்தது. கோயில் காரியங்களை ஸ்ரீ காரியம் என்பர். அவர்கள் கூடிப்பேசுவதற்கு மண்டபம் இருந்ததாக வும், அதன் பெயர் "தேவாசிரியன்" என்றும் திருவாரூர்க் கல்வெட்டுக் கூறுகின்றது. (671 of 1919) கோயிலுக்கு அளித்த தருமங்கள் சரியாக நடைபெறுகிறதா என்று கவனிக்க அதிகாரிகள் இருந்தனர். ஒரு கல்வெட்டு 'சிரத்தா மந்தர்' எனவும், ஸ்ரீ நிவாஸநல்லூர்க் கல்வெட்டில் அவர்கள் 'சதுர் வேதிப்பட்டாரப் பெருமக்கள்' (588 of 1904) எனவும் அழைக்கப்படுகின்றனர்.

சிவன் கோயிலில், வரவு செலவுக் கணக்குகளைச் சண்டேசுவரர் பேரினால் எழுதுவது பண்டை மரபு. இதை ஒரு கல்வெட்டுப் பாடல் நமக்கு எடுத்துரைக்கின்றது.

"சண்டேச்சரன் ஓலை சாகரஞ்சூழ வையகத்தீர்
கண்டேச்சரன் கரும மாராய்க—பண்டேய்
அறஞ் செய்தான் செய்தான் அறங் காத்தான் பாதம்
திறம்பாமைச் சென்னி மேற் கொள்க."

கோயில் அதிகாரிகளாக வருபவர் கல்வி கேள்விகளில் சிறந்தவராக இருப்பர். கோயில் அதிகாரிக்கு என்ன என்ன அதிகாரங்கள் உண்டு எனவும், கோயிலுக்கு அளிக்கப்பட்ட கொடைகள் சரியாக நிறைவேற்றப் படாவிட்டால் அல்லது கோயில் வரவு செலவுக் கணக்குகள் சரியாக எழுதப்படாவிடில், அந்த வேலைக்குரியவர்களை எவ்வாறு விசாரித்தனர் என்பதையும் கல்வெட்டால் அறிகின்றோம்.

முதலாம் இராசராசன் ஏழாம் ஆட்சியாண்டில் சேட்டபோசன் வெண்ணய கிரமவித்தன் என்பானைக் கோயில் அதிகாரியாக நியமித்தான். கோயில் காரியங்களை மேற்பார்வை செய்ய அதிகாரிக்கு உரிமை அளிக்கப்பட்டது. மேலும் சிப்பந்திகள் இவனை எதிர்த்தால் வேலையினின்று நீக்கவும், 25 கழஞ்சு பொன் தண்டம் விதிக்கவும் அதிகாரம் இவனுக்குக் கொடுக்கப்பட்டது. (ARE 1929)

ஆனைமங்கலம் கல்வெட்டில் கூறியபடி நிபந்தங்களை இறைவனுக்கு நடத்தாவிடில் ஸ்ரீ காரியம் ஆராய்பவன் நாடோறும் இரு காசு கோயிலுக்குத் தண்டம் கொடுக்க வேண்டும். அக்காசு கொண்டு திருமாலுக்கு திருவிளக்கு எரிக்கவேண்டும். இந்நிபந்தனைகளைச் சபையார் ஏற்றுக் கொண்டு நடத்தாவிடில் ஆறுகாசு தண்டம் கொடுக்கப்படவேண்டும். இத்தண்டம் சந்திரன் சூரியன் உள்ளவரை செலுத்த வேண்டும் என ஆனைமங்கலம் கல்வெட்டுக் கூறுகின்றது.

தில்லைக் கோயிலில் முதலாம் ஆதித்தன் காலத்தில் கோயில் காரியங்களைப் பற்றி விசாரணை நடந்தது. நகரக் கரணத்தான், கணக்கு எழுதுகின்றவன், மற்றொருவன் மூன்று பேரும் கணக்கு எழுதுவதில் தவறு செய்ததற்காக அபராதம் விதிக்கப்பட்டது. (35 of 1895).

சிற்றியாறூர் கிராமம் திருமால்புரம் கோயிலுக்கு இறையிலியாக கொடுக்கப்பட்டது. அருகில் உள்ள புதுப்பாக்கம் கிராமசபை அந்நிலத்தை நிபந்தங்களின் படி செய்வோம் என உறுதி கூறியது. ஆனால் அந்நிலங்களின் விபரம் கோயில் கணக்குகளில் இணைக்கப்படவில்லை. புதுப்பாக்கம் சபையும் நிபந்தங்களின் படி செய்யவில்லை. முதலாம் பராந்தகனின் 36-ஆம் ஆட்சியாண்டில் மறுபடி அந்தக் கோயிலுக்கு மேலும் நிலம் அளித்து அச்சபையிடமே அளிக்கப்பட்டது. பிறகு தேவகன்மியர்கள் [அர்ச்சகர்கள், உண்ணாழிகை உடையார் (incharge of temple store ). கோயில் தர்மகர்த்தாக்கள்] ஆகியோர் உத்தம சோழன் அமைச்சன் சோழ மூவேந்த வேளானிடம் புகார் செய்தனர். இது அரசனிடம் தெரிவிக்கப்பட்டது. அரசன் அர்ச்சகர்கள் மற்றும் சபையின் அங்கத்தினர்களைக் கூப்பிட்டு விசாரணை செய்தபின், சபையின் நிர்வாகக் கேடுகள் தெரியவந்தன. நிபந்தங்களைச் சரியாக நடத்த அரசன் அவர்களுக்கு ஆணையிட்டான்.

மன அமைதி! "என்னே மன அமைதியின் இயல்பு! அதுவே எல்லா நற்குணங்களுக்கும் முதற் பெருங் கருவி; அதுவே பெரியோருக்கு உற்றதோர் வல்லரண்; அதுவே இன்பப் பேரூற்று; அதுவே அன்பினுக்கு ஆணிவேர்; அதுவே அருளிற்கு வித்து; அதுவே மெய்த் தவம்; அதுவே தவப்பயன்; அதுவே நல்லறம்; அதுவே தலைப்படு விரதம்; அதுவே சிந்தைக்கு அணிகலன்; அதுவே நிலமகள் பெருநலன்; அதுவே உளத்திற்கு நந்தா விளக்கு; அதுவே புகழ் வழங்கும் மதியம்; அதுவே தீங்கிருள் நீக்கும் பரிதி!"

—"பரிதிமாற் கலைஞர்"




### மேலும் சிறப்புற

நமது இந்து சமயத்திற்கும் அன்னைத்தமிழுக்கும் தாங்கள் ஆற்றிவரும் தொண்டு மேன்மேலும் சிறப்புற இறைவனை வேண்டுகிறேன்.

—சோ. கிருஷ்ணமூர்த்தி, திருச்சி-2.

### உலகின்புற

தங்கள் இதழில் வெளியாகியிருந்த கட்டுரைகள், நமது சமய ஒழுக்க நெறிகள், தத்துவ விளக்கங்கள் ஆகியவற்றைப் பார்த்த நான் எங்கள் கிராம மக்களின் சார்பாக, எங்கள் சக்தி படிப்பகத்திற்கு சந்தா அனுப்பியுள்ளேன்.

—கு. பொன்னுசாமி, முகிலன் குடியிருப்பு.

### அறிவு வளர்ச்சிக்கு

இந்த இதழ் மிகவும் சிறப்பாக உள்ளது. அறிவு வளர்ச்சிக்கு நல்ல கருத்தாக அமைந்துள்ளது.

—டி. ஆர். கருப்பசாமி, தேவாரயநேரி.

### தத்துவம் தெரிந்தது

இந்நாள் வரைக்கும் சின்முத்திரையைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேனே தவிர, பொருள் தெரியாது. "அருளோசை" மூலம் எனக்கு அதன் தத்துவம் தெரிந்தது. நன்றி, நன்றி.

—பி. சுப்பிரமணியநாடார்—பணிக்கன் குடியிருப்பு

### இறைவன் குரலோசை...

மனிதனை மனிதனாக வாழச்செய்யும் இறைவனின் குரலோசையாகவே அருளோசையைக் காண்கிறேன்.

—சு.ப. இராமமூர்த்தி "பரணி", சென்னை-24.

### சுண்டுவிரல் விளக்கம்

மெய்ப்பொருள் காண்பதறிவு என்ற பகுதியில் மணமக்கள் சுண்டுவிரல்கள் பிடிப்பதைப் பற்றிய விளக்கம் அறிந்து பேருவகை அடைந்தேன். வாழ்க தெய்விகப் பேரவை.

—பி. அண்ணாமலை, ஆசிரியர், அம்மையார்குப்பம்.

### நல்லதோர் அரண்

அலைபாயும் உள்ளத்திற்கு அருளோசை நல்லதோர் அரணாக அமைகிறது.

—புலவர் வ. ஏகாம்பரம், தமிழாசான், ஆதமங்கலம்.

### மக்களும் மாக்களும்

மக்களுக்கும் மாக்களுக்கும் உள்ள வேறுபாட்டை அருளோசை மிக நன்றாக விளக்கியமைக்கு நன்றி.

—ஜெ. ஞானமூர்த்தி, ஆசிரியர், வேதாரண்யம்.

### தெய்வீக முரசு

அருளோசை என்னும் முரசில் ஒலிக்கும் தெய்விக ஒலி இவ்வகிலமெனும் செவிகளில் மோதி நலம் தரட்டும்.

—தி. தேவகி, ஆம்பூர்.

### எங்கள் குடும்பம்

எங்கள் குடும்பத்திலனைவரும் தங்கள் அருளோசை இதழைத் தவறாது படிக்கிறோம்.

—தி. கு. நவனீத கிருஷ்ணன், திருச்சி-2.

கரும்பமரும் மொழிமடவாள் பங்கன் தன்னைக்
கனவயிரக் குன்றனைய காட்சியானை,
அரும்பமரும் பூங்கொன்றைத் தாரான் தன்னை
அருமறையோடு ஆறங்கம் ஆயினானைச்
சுரும்பமரும் கடிபொழில்கள் சூழ் தென்னூர்ச்
சுடர்க் கொழுந்தைத் துளக்கில்லா விளக்கைமிக்க
பெரும்பொருளைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே!

பெரியதிருத்தாண்டகம்
—திருநாவுக்கரசர்.

* * *



Edited, Printed at Peravai Achakam and Published by A. Narayanaswamy B. A., for the Tamil Nadu Deivika Peravai at No. 9, Maharaja Surya Rao Road, Alwarpet, Madras-600018.